சற்குருவே துணை

ஸ்ரீலஸ்ரீ.நாராயண சுவாமிகள்

ஸ்ரீ தாண்டவேஸ்வரர் சுவாமிகள் ஜீவ சமாதி மடாலயம்,

நன்னிலம்.

# கைவல்ய நவநீதம்

## மூலமும் உரையும்



வெளியீடு நாள் : **22.5.2015, வெள்ளி**

வெளியீடு எண் - **22**

வெளியிடுபவர்கள் :

ஸ்ரீ மதுவனேஸ்வரர் சுவாமி வார வழிபாட்டுக் கழகம்

மற்றும் மகான் ஸ்ரீ மகா கோவிந்த சுவாமிகளின் சீடர்கள்,

**நன்னிலம்.**



ஸ்ரீ நாராயண சுவாமிகள்　　　ஸ்ரீ தாண்டவேஸ்வரர் சுவாமிகள்

சற்குருவே துணை

**ஸ்ரீலஸ்ரீ நாராயண சுவாமிகள்**

**ஸ்ரீ தாண்டவேஸ்வரர் சுவாமிகள் ஜீவ சமாதி மடாலயம்,** நன்னிலம்.

# கைவல்ய நவநீதம் மூலமும் உரையும்
# நூல் வெளியீட்டு விழா அழைப்பிதழ்

மெய்யன்புடையீர் ! வணக்கம்.

நிகழும் மன்மத வருடம் வைகாசி மாதம் 8 - ஆம் நாள் ( 22.5.2015 ) வெள்ளிக்கிழமை புனர்பூசம் நட்சத்திர நன்னாளில் மாலை 4.00 மணியளவில் அருள்மிகு.**ஸ்ரீலஸ்ரீ நாராயண தாண்டவேஸ்வரர் சுவாமிகள் ஜீவ சமாதி மடாலயத்தில் கைவல்ய நவநீத நூல் வெளியீட்டு விழா** நடைபெற உள்ளது. அனைவரும் பங்கேற்று சிறப்பிக்க அன்புடன் அழைக்கிறோம்.

*நிகழ்ச்சி நிரல் :* மாலை 4.00 மணி **கைவல்ய நவநீதம் முற்றோதுதல்.**

திருமதி.மீனாட்சி நடராஜன், திருமதி.ஆனந்தி பாலச்சந்தர், திருமதி.அமுதா பக்கிரிசாமி, திரு.புண்ணியகோடி.

மாலை 6.00 மணி **சிறப்பு அபிஷேகம் & தீபாராதனை – 6.31 மணி நூல் வெளியிடுதல்.**

குத்து விளக்கு ஏற்றுதல் :

திருமதி.சந்திரா மருதவாணன், திருமதி.சுபா சுப்ரமணியன்,

செல்வி.சரண்யா (எ) V.நாகலெட்சுமி, செல்வி.S.மதுமிதா, செல்வி.S.அன்னபூரணி



## மகான் ஸ்ரீமகாகோவிந்த சுவாமிகள்

தொடர்பு : திரு. V.சுப்பிரமணியன், கடைவீதி, நன்னிலம்.

நூல் கிடைக்குமிடம் : விஜய் ஜெராக்ஸ், கடைவீதி, நன்னிலம்.


நூல் தொகுப்பு :

சிவத்திரு.ச.வெங்கடேசன், எம்.எஸ்.ஸி.,

தலைவர்.ஸ்ரீ மதுவனேஸ்வரர் சுவாமி வார வழிபாட்டுக்கழகம். நன்னிலம்.

செல் : 9943209771



ராம் ஆப்செட், பிரிண்டர்ஸ், நன்னிலம். போன் : 229026



ஸ்ரீ நாராயண சுவாமிகள் ஸ்ரீ தாண்டவேஸ்வரர் சுவாமிகள்

சற்குருவே துணை

**ஸ்ரீலஸ்ரீ நாராயண சுவாமிகள்**

**ஸ்ரீ தாண்டவேஸ்வரர் சுவாமிகள் ஜீவ சமாதி மடாலயம், நன்னிலம்.**

# கைவல்ய நவநீதம் மூலமும் உரையும்
# நூல் வெளியீட்டு விழா அழைப்பிதழ்

மெய்யன்புடையீர் ! வணக்கம்.

நிகழும் மன்மத வருடம் வைகாசி மாதம் 8 - ஆம் நாள் ( 22.5.2015 ) வெள்ளிக்கிழமை புனர்பூசம் நட்சத்திர நன்னாளில் மாலை 4.00 மணியளவில் **அருள்மிகு.ஸ்ரீலஸ்ரீ நாராயண தாண்டவேஸ்வரர் சுவாமிகள் ஜீவ சமாதி மடாலயத்தில் கைவல்ய நவநீத நூல் வெளியீட்டு விழா நடைபெற உள்ளது.** அனைவரும் பங்கேற்று சிறப்பிக்க அன்புடன் அழைக்கிறோம்.

*நிகழ்ச்சி நிரல் :* மாலை 4.00 மணி **கைவல்ய நவநீதம் முற்றோதுதல்.**

திருமதி.மீனாட்சி நடராஜன், திருமதி.ஆனந்தி பாலச்சந்தர், திருமதி.அமுதா பக்கிரிசாமி, திரு.புண்ணியகோடி

மாலை 6.00 மணி **சிறப்பு அபிஷேகம் & தீபாராதனை - 6.31 மணி நூல் வெளியிடுதல்.**

குத்து விளக்கு ஏற்றுதல் :

திருமதி.சந்திரா மருதவாணன், திருமதி.சுபா சுப்ரமணியன்,

செல்வி.சரண்யா (எ) V.நாகலெட்சுமி, செல்வி.S.மதுமிதா, செல்வி.S.அன்னபூரணி

## அணிந்துரை :

இன்பத்தில் மகிழ்ச்சி அடையாமலும், துன்பத்தில் வருந்தி துவளாமலும் "யான்" என்கிற அகப்பற்று "எனது" என்கிற புறப்பற்று நீங்கி, மண், பொன், பெண் ஆசை நீங்கி இருப்பவருக்கே முத்தி கிட்டும். அந்த மோக்ஷத்தை நமக்கு எளிமையாக உணர வைக்க கூடிய ஞானநூல் இந்த கைவல்ய நவநீதம் ஆகும்.

" எதையும் சார்ந்து இல்லாமல் தன் ஸ்வரூபமே ஆனந்தம்" என்று அறிவதுதான் கைவல்யம். வேதத்தின் சாரத்தை தமிழில் எடுத்துரைக்கும் நூல் கைவல்ய நவநீதம். இந்நூலில் "அயம் ஆத்மா பிரமம் என்ற ஞானமே" முடிவாக அறிய முடியும்.

இந்த நூலில் முதலில் உள்ளது ச்ரவணம் (கேட்டல்) எனும் தத்துவ விளக்கபடலம் (பாயிரத்தோடு சேர்த்து 108 பாடல்கள்) அடுத்துவருவது மனனம் ( சிந்தித்தல்) என்றும் சந்தேகம் தெளிதல் படலம் 180 பாடல்கள்) ஆகும். இந்நூலில் தத்துவ விஷயங்கள் நன்றாக விளக்கிய பின், ஏற்படக்கூடிய சந்தேகங்களை எல்லாம் தீர்த்து வைக்கும் வண்ணம் வேதாந்த சாஸ்திர நூல் அனைத்திற்கும் சிகரமாக தமிழில் அருளப்பட்ட நூலே கைவல்ய நவநீதம் என்ற இந்த சாஸ்திர நூல்ஆகும்.

மிக குறுகிய காலத்தில், குறைந்த செலவில் நூல் தயாரிக்க வேண்டிய சூழ்நிலையில் 288 பாடல்களின் சாரம் மாறாமல் எளிய நடையில் அதிக விளக்கம் தர இயலாமல் பாடல்களில் பொருள் எழுதப்பட்டுள்ளது. இதில் ஏதேனும் சொற்குற்றமோ, பொருள் குற்றமோ இருக்குமேயானால் இதனைப் படிக்கும் கற்றறிந்தோர் பொறுத்தருள வேண்டுகிறோம்.

ஆன்மநேய மெய்யன்பர்கள் பயன் பெறும் பொருட்டு "கைவல்ய நவநீதம் மூலம் உரையும்" என்கிற இந்த நூலை வெளியிட துணை புரிந்த குருவருள் மற்றும் இறையருளை போற்றி ஸ்ரீ மதுவனேஸ்வரர் சுவாமி வாரவழிபாட்டுக் கழகத்தின் 22 வது வெளியீடாக வெளியீடுவதில் பெருமை கொள்கிறோம்.

இந்நூலை வெளியிட பொருளுதவி, ஆக்கம், ஊக்கம், ஆலோசனைகள், வழங்கிய நல் உள்ளங்களுக்கும், இந்நூலை பயன்படுத்தும் அனைவருக்கும், நன் முறையில் அச்சிட்டு வெளியிட உதவிய நல்லமாங்குடி ராம் ஆப்செட் நிறுவனத்திற்கும் ஞான குருவாக அருளும், ஸ்ரீ நாராயண தாண்டவேஸ்வர சுவாமிகள், ஸ்ரீ மதுவனேஸ்வரர் சுவாமிகள், இம்மைக்கு பொருளையும், மறுமைக்கு மோக்ஷத்தையும் வழங்கி ஆசீர்வதிக்க அவர்களின் பொன்னார் திருவடிகளை மன, மொழி, மெய்களால் வணங்கி பிரார்த்தித்துக் கொள்கிறோம்.

இங்ஙனம்.

**ஸ்ரீ மதுவனேஸ்வரர் சுவாமி வாரவழிபாட்டுக் கழகம்,**

நன்னிலம்.

நூல் தொகுப்பு :

சிவத்திரு.ச.வெங்கடேசன், எம்.எஸ்.ஸி.,
தலைவர்.ஸ்ரீ மதுவனேஸ்வரர் சுவாமி வார வழிபாட்டுக்கழகம், நன்னிலம்.
செல் : 9943209771

## அரும்பதங்களுக்கு அர்த்தம் :

| | | | |
|---|---|---|---|
| 1. | ஞான பூமி | - | சுபேச்சை, விசாரணை, தனுமானசி, சத்துவாபத்தி, அசம்சத்தி, பதார்த்தபாவனை துரியம். |
| 2. | சூட்சுமசரீரம் | - | மனம்,புத்தி, ஞானேந்திரியங்கள், வாயுக்கள், கன்மேந்திரியங்கள், ஆகியவை சூட்சும சரீரம் ஆகும். |
| 3. | தூல சரீரம் | - | கண்ணால் காணக்கூடிய உடம்பு |
| 4. | காரண சரீரம் | - | உறக்கத்தில் கனவு போன்றது. |
| 5. | அவத்தை | - | அவத்தை – 5 . 1) சாக்கரம் – நனவு,<br>2) சொப்பனம் – கனவு,<br>3). சுழுத்தி – உறக்கம்,<br>4) துரியம் – பேருறக்கம்<br>5) துரிய தீதம் – உயிர்ப்பு அடக்கம். |
| 6. | மானசம் | - | ஆமைபோல் மனதால் கருதுதல். |
| 7. | நயனம் | - | மீன் போல் கண்ணால் நோக்குதல். |
| 8. | ஸ்பரிசம் | - | பறவை போல் தடவுதல். |
| 9. | அஞ்ஞானபூமி | - | பீஜ சாக்கிரம், சாக்கிரம், மகா சாக்கிரம், சாக்கிரத்தில் சொப்பனம், சொப்பனம், சொப்பனத்தில் சாக்கிரம், சுழுத்தி. |

**ஆறு குணங்கள் :**

10. 1.சமம் – மனம், புத்தி, சித்தம், அகங்காரம், என 4 அந்தக் கரணத்தை அடக்குதல்

2, தமம் – சுரோத்திரம், முதலிய ஞானேந்திரியங்கள், வாக்கு, முதலிய கர்மேந்திரியங்கள், ஆகிய புறக் கரணங்களை அடக்குதல்.

3. திதிட்சை – காமம், வெகுளி, முதலியன மிகுந்து விடாமல், தணியச் செய்வது

4, உபரதி – காமிய கருமங்களை சுமைபோல் உணர்ந்து விடுதல் ஆகும்.

5. சிரத்தை – சுருதி வாக்கியம்,குரு வாக்கியத்தை நிச்சயம் என நம்புவது

6. சமாதானம் – குருவின் உபதேசத்தை மனதில் பொருத்தி உறுதியாக இருத்தல்.

11. கர்ம காண்டம் – உடல் அதன் காரணமாக குடும்பம். இவற்றை முறையே யான், எனது, என்று கருதி இருப்பவன் கர்ம காண்டி.

பக்தி காண்டம் – எல்லா செயல்களும் ஈஸ்வரனுக்கே என்று உறுதியுடன் நினைத்து ஈஸ்வரார்பணம் செய்பவன் பக்தி காண்டி.

ஞான காண்டம் – செய்கின்ற செயல், அனைத்திற்கும் தான் சாட்சி மாத்திரமே என்று என்பவன் அறியாமை நீங்கிய சிறந்த ஞான காண்டியாவான்.

12. கருமி – ஆத்மா, அநாத்மா, பேதம், அறியாது வருணாச்சிரம தருமம் மட்டும் செய்பவர் நூறு பிறப்பிற்குள் வீடு பேற்றினை அடைபவர்.

மூமூட்சு – உலகம் பொய் என்று கேட்டு அறிந்த (பரோட்ச) ஞானத்துடன் குரு சேவை, சிரவணம் மனனம், ஆகிய புறச் செயலில் நின்று மூன்று பிறப்புகளில் வீடுபேறு அடைபவர்.

அப்பியாசி – உலகம் பொய் என்று அறிந்து தன் மனம் நிதித்தியாசனத்தில் பொருந்தி இரண்டு பிறப்புகளில் வீடுபேறு அடைபவர்.

அனுபவி – உலக விவகாரத்தை (வாசனை அகப்பற்று) எண்ணாமல். ஆத்ம நாட்டம், மேலிட தக்க விவேகத்தைப் பெற்றவர் அனுபவி ஒரே பிறவியில் முத்தியடைபவன்.

ஆரூடன் - உலக விவகாரம் சிறிதும் தோன்றாமல் சுயம் பிரகாசமான ஆத்ம ஞானத்தால் இந்த சரீரத்திலேயே வீடுபேறு அடைபவன் ஆரூடன்.

13. எட்டுவித்தை 1. ஆகருஷணம், 2) உச்சாடனம் 3) தம்பனம் 4) பேதனம் 5) மாரணம் 6) மோகனம் 7) வசியம் 8) வித்து வேடணம்.

14. சஞ்சிதம் - சேர்ந்துள்ள முன் வினைப்பயன்.

15. மர்க்கட நியாயம் - குரங்கின் குட்டி தன் தாய்க் குரங்கை விடாது பற்றி பிடித்தல் குட்டிக்கு பொறுப்பு.

மார்ஜிர நியாயம் - பூனை குட்டியை பூனை தன் வாயில் பற்றும் குட்டிக்கு பொறுப்பு இல்லை.

16. பேதம் - 1) சிவ ஈஸ்வர பேதம்
2) சீவர்களின் பரஸ்பர பேதம்
3) சீவ சடங்குகளின் பேதம்
4) ஈஸ்வர சடங்களின் பேதம்
5) சடங்களின் ஒன்றற்கு ஒன்றுள்ள பேதம்.

17. இலக்கணம் - 3 வகை 1.சொரூபம் - உஷ்ணப் பிரகாச வடிவம் சூரியன் என்று கூறுவது போல் சச்சிதானந்த வடிவமே ஆத்மா என விளங்குவது சொரூப இலக்கணம்.

2. தடத்தம் - மரக் கிளையின் நுனியில் இருப்பதாக சந்திரனைக் காட்டுவது போல் பூதாதி பிரபஞ்ச காரணமாய் இருப்பதாக ஆன்மாவை விளக்குவது தடத்தி இலக்கணமாம்.

3. அதத் வியா விருத்தி - தேகாதி இந்திரியங்களை யுத்தியால்இது ஆத்மா அல்ல என நீக்கி எஞ்சி நின்ற ஆத்மாவை அறிவிப்பதே அதத் வியா விருத்தி இலக்கணம்.

18. சண்டமாருதம் -பெருங்காற்று

19. எட்டு வகை பிரமாணங்கள் :

1.காட்சி (பிரத்தியட்சப்) பிரமாணம் 2) அனுமானப் பிரமானம்
3) ஆகம (சப்த) பிரமாணம் - 4) காட்சி அருத்தாபத்தியம்
(திருஷ்டாருத்ரா பத்தி) கேள்வி அருத்தாபத்தி (சுருத்தாருத்தாத்தி)
5) உபமானப் பிரமாணமாம் 6) அபாவப்பிரமாணமாம்
(அனுபவப்திப்பிரமாணம்) 7) சம்பவப் பிரமாணமாம்
8) ஜதிகப் பிரமாணம்.

20. அன்னமய கோசம் - தூல சரீரம், பிறப்பு இறப்பு உடையது, சுத்தம் இல்லாதது.

பிராணமய கோசம் - சூட்சும சரீரம், 1. பசி தாகம், வலிமை, வலிமை இல்லாது கண்மேந்திரயத்தோடு பொருத்தியது.

மனோமய கோசம் - சூட்சும சரீரம் , 2 காமம், மதம், உலோபம், பயம், குரோதம், பொறாமை தன்மை கொண்டது.

விஞ்ஞான மய கோசம் - சூட்சும சரீரம், 3 சுக துக்கத்துடன். கர்த்தா, போக்தா தன்மையுடையது.

அனந்தமய கோசம் - அறிவு, அறியாமையோடு நித்திரையில் வரும் சுகம் முதலிய தன்மையுடையது.

21.அவத்தை மூன்று - சாக்கிரம், சொப்பணம், சுழுத்தி.

22. கன்மம் - சஞ்சித கன்மம், ஆகாமிய கன்மம், பிராரத்த கன்மம்.

23. சரீரம் - தூல, சூட்சும , காரண

24. குணம் - சாத்துவிக குணம், இரஜோ குணம், தமோ குணம்.

25.பதமுத்தி - சாலோகம், சாமீபம், சாரூபம்

26.ஜிஞ்ஞாசு - ஞான விருப்பம் உடையவன்

27.முமுட்சு - மோட்ச இச்சையுடையவன்

28.சுருதி - (வேதப்) பிராமாணம் - இறைவனால் உண்டாகப்பட்டது.

29. கர்மம், பக்தி, ஞானம், குரு முகமாக கேட்டல், சிந்தித்தல், தெளிதல்.

30. சாதனம் - விவேகம், வைராக்கியம், சமாதி சட்க சம்பத்தி, முமுட்சுத்துவம் என நான்கு சாதனங்கள்.

# நன்னிலம் தாண்டவராய சுவாமிகள் அருளிச் செய்த

# கைவல்ய நவநீதம்

பாயிரம்

1. பொன்நில மாதர் ஆசை பொருந்தினர் பொருந்தார் உள்ளம்
தன்னில்அந் தரத்தில் சீவ சாட்சிமாத் திரமாய் நிற்கும்
ஏந்நிலங் களினும் மிக்க எழுநிலம் அவற்றின் மேலாம்
நன்னிலம் மருவும் ஏக நாயகன் பதங்கள் போற்றி.

ஏக நாயகனை வணங்குதல். உலகத்தவர் அதிக பற்று வைக்கும் தங்கம், பூமி மற்றும் இச்சையை விளைப்பதற்கு காரணமாகிய மாதர் மேல் ஆசை உடைய அஞ்ஞானிகளும் ஆசையற்ற ஞானிகள் ஆகியோரின் உள்ளதாமரையில் நீக்கமற நிறைந்து இருப்பவர் ஏக நாயகனான சிவபரம்பொருளாகிய சிவ பிரம்மத்தை போற்றி வணங்குவோம். துரிய பூமி ஆகிய நன்னிலம் மருவும் ஏகநாயகன் என்பது தனது குருவாகிய தாண்டவராய சுவாமிகளையும், குறித்து வணங்குகிறேன் என்பதாம்.

2. ஈன்றுஅளித்து அழிக்கும் செய்கைக்கு ஏதுவாம் அயனாய் மாலாய்
ஆன்றஈ சனுமாய்த் தானே அநந்தமூர்த் தியுமாய் நிற்கும்
மூன்றமூர்த் தனும்ஆய் இன்பப் புணரிஆ தவன் ஆய் நாளும்
தோன்றிய விமல போத சொரூபத்தைப் பணிகின் றேனே.

ஆத்ம ஜோதியை வணங்குதல். பஞ்ச பூதங்களால் உருவாக்கப்பட்ட இந்த உலகை படைத்து காத்து, தன்னகத்தே ஒடுக்கிக் கொள்ள கூடிய ஏக நாயகனாகிய சிவபெருமானும், என் உடம்பில் இருக்கிற ஆத்ம ஜோதியும் ஒன்று என்று உணரும் படி அந்த கூடஸ்த ஆத்மாவே ஏக நாயகனாக உள்ளது என்கிறார். அந்த ஆன்ம ஜோதியை வணங்குகிறேன்.

3. எவருடை அருளால் யானே எங்கும்ஆம் பிரமம் என்பால்
கவருடைப் புவனம் எல்லாம் கற்பிதம் என்று அறிந்து
சுவரிடை வெளிபோல் யான்என் சொருபசு பாவம் ஆனேன்
அவருடையப் பதும பாதம் அனுதினம் பணிகின் றேனே.

குரு வணக்கம். அனேக உடம்பு எடுத்து கடவுளை வெளியே தேடிக் கொண்டிருந்த ஜீவனுக்கு தான் தேடிக் கொண்டிருக்கிற சிவம் உன் உடம்புக்குள்ளேயே அறிவு சொரூபமாகிய ஆத்ம ஜோதியாக உள்ளது. என்று ஒரு சற்குரு அடையாளம் காட்டினால் அந்த தரிசனத்தினால் அனைத்து துக்கங்களும் நீங்கி மோட்சம் கிட்டுகிறது. இப்படிப்பட்ட மோட்சத்தை அளிக்கும் குருவை வணங்குகிறேன்.

4. என்னுடை மனது புத்தி இந்திய சரீரம் எல்லாம்
என்னுடை அறிவி னாலே இரவிமுன் இமமே ஆக்கி
என்னுடை நீயும் நானும் ஏகம்என்று ஐக்கி யம்செய்ய
என்னுடைக் குருவாய்த் தோன்றும் ஈசனை இறைஞ்சி னேனே.

ஞான ஆற்றலுக்கு வணக்கம் :

சூட்சும சரீரம், தூல சரீரம், இவ்விரண்டிற்கும் மூல காரணமான காரணசரீரம் இவற்றினால் ஏற்படும் அவத்தைகள் அனைத்தும் நீக்கும் மனோ நாசமே நித்திய மோட்சம் ஆகும். இந்த நித்திய மோட்சம் கிடைப்பதற்கு காரணம் ஞானம், எனவே ஞான ஆற்றலை வணங்குகிறேன்.

5. அந்தமும் நடுவும் இன்றி ஆதியும் இன்றி வான்போல்
சத்ததம் ஒளிரும் ஞான சற்குரு பாதம் போற்றிப்
பந்தமும் வீடும் காட்டப் பரந்த நூல் பார்க்க மாட்டா
மந்தரும் உணரு மாறு வத்துதத் துவம்சொல் வேனே.

மானுட ஜீவன் மோட்சம் அடைவதற்கு இரண்டு சாதனங்கள் தேவை. அவை அனுபந்த சதுட்டயம், சாதன சதுட்டயம் ஆகும். குருவின் அருளினால் பந்தத்தின் இலக்கணம். வீடு பேற்றின் இலக்கணம் விளக்கும் பொருட்டும் எல்லோரும் வேதாந்த கருத்துக்களை எளிதில் தெரிந்து கொள்ள இந்நூலை இயற்றினேன்.

6. படர்ந்தவே தாந்தம் என்னும் பாற்கடல் மொண்டு முன்னூல்
குடங்களில் நிறைத்து வைத்தார் குரவர்கள் எல்லாம் காய்ச்சிக்
கடைந்துஎடுத்து அளித்தேன் இந்தக் கைவல்ய நவநீ தத்தை
அடைந்தவர் விடய மண்தின்று அலைவரோ பசியி லாரே,

உபநிடத மென்னும் பாற்கடலில் முகந்து முன்னூறு குடங்களில் இதற்கு முன் ஆசிரியர்கள் நிறைத்து வைத்தார்கள், இவைகளின் சாரமாக கைவல்லிய நவநீதத்தை கடைந்து எடுத்து கொடுத்தேன் இதனை படித்தவர்கள் நித்திய திருப்தியடைந்தவர்களாக சனன மரணத்தில் சுழல மாட்டார்கள். விடயா நந்தமான மண்ணைப் புசியார்கள் எனக் கூறினதாம்

7. முத்தனை வேங்க டேச முகுந்தனை எனைஆட் கொண்ட
கர்த்தனை வணங்கிச் சொல்லும் கைவல்ய நவநீ தத்தைத்
தத்துவ விளக்கம் என்றும் சந்தேகம் தெளிதல் என்றும்
வைத்துஇரு படலம் ஆக வகுத்துரை செய்கின் றேனே.

பாசங்களை நீக்கி நிற்பவனை வேங்கடாசலபதியாகி என்னை அடிமை கொண்ட இறைவனைப் பணிந்து உரைக்குங் கைவல்லிய நவநீதமென்னும் ஞான சாத்திரத்தைத் தத்துவ விளக்கம் எனவும், சந்தேகந் தெளிதல் எனவும் இரண்டு படலமாக பிரித்துச் சொல்கிறேன்.

## தத்துவ விளக்கப் படலம் :

8. நித்திய அநித்தி யங்கள் நிண்ணயம் தெரிவி வேகம்
மத்திய இகப ரங்கள் வருபோகங் களில்நி ராசை
சத்தியம் உரைக்க வேண்டும் சமாதிஎன்று ஆறு கூட்டம்
முத்தியை விரும்பும் இச்சை மொழிவர்சா தனம்இந் நான்கே.

தத்துவ விளக்கப் படலம் :

மாண்ட உடம்பில் அழியும் பொருள் உடம்பு என்றும் அழியாப் பொருள் ஆன்மா என்று பிரித்து அறியும் அறிவே நித்தியா அநித்திய வஸ்து விவேகம் அழியும் பொருள் மேல் உள்ள பற்றை விடுவதே வைராக்கியம். வேதத்தையும், குருவையும் நம்புவது சட்க சம்பத்தாம். இந்த உடம்பில் உள்ள ஆத்ம சொருபத்தை தரிசிக்க அவா உள்ளவரே முமுட்சு ஆவர். இந்த நான்கு சாதனங்களை அறிந்து கொண்டவரே உண்மையான அதிகாரியாவார்.

9. சமம்தமம் விடல்ச கித்தல் சமாதானம் சிரத்தை ஆறாம்
சமம்அகக் கரண தண்டம் தமம்புறக் கரண தண்டம்
அமர்தரு கருமம் பற்றாது அறுத்தலே விடல் என்று ஆகும்
மமர்செயும் காமம் ஆதி வரின்அடக் குதல்ச கித்தல்.

சட்க சம்பந்தம் என்பது சமம், தமம், விடல், சகித்தல், சமாதானம், சிரத்தை என ஆறாகும். மனப் போக்கை தடுத்தல் சமம். புறக் கரணங்களை கட்டுப்படுத்துதல் தமம். உலக விகாரங்களை ஒழித்தல் விடல். மயக்கத்தை தரக்கூடிய காம குரோதத்தை விவேகத்தால் அடக்குதல் சகித்தல் ஆகும்.

10. சிரவணப் பொருளைத் தானே சித்தம்சிந் திக்கு மாறு
சரதமா வைக்கும் இத்தைச் சமாதானம் என்பர் மேலோர்
பரமசற் குருநூல் அன்பு பற்றலே சிரத்தை ஆகும்
வரம்மிகு சமாதி ஆறு வகையின்சொற் பொருள்இ தாமே.

வேதாந்தத்தின் அர்தத்தினை உள்ளது உள்ளபடி அறிதல் சமாதானம் ஆகும். மேலான ஆசிரியர்களிடத்தும், வேதாந்த சாத்திரங்களிடத்தும் அன்பு வைத்தல் சிரத்தையாகும். மேன்மை மிகுந்த சமாதி எனும் ஆறுபிரிவான பதத்துக்கு இதுவே அர்த்தம் ஆகும்.

11. சாதனம் இன்றி ஒன்றைச் சாதிப்பார் உலகில் இல்லை
ஆதலால் இந்த நான்கும் அடைந்தவர்க்கு அறிவு உண்டாகும்
நூதன விவேகி உள்ளம் நுழையாது நுழையும் ஆகில்
பூதசன் மங்கள் கோடி புனிதனாம் புருடன் ஆமே.

சாதனம் இல்லாமல் ஒரு காரியத்தை சாதிக்க இயலாது. விவேகம், வைராக்கியம் சமாதி சட்க சம்பந்தி முமுட்சுத்துவம் ஆகிய இந்த நான்கு சாதனங்களை அடைந்தவர்களுக்கே ஜீவ பிரம்ம ஐக்கிய ஞானம் கிட்டும். இந்த சாதனங்கள் இல்லாதவர்கள் மனம் ஞானவழியில் செல்லாது அப்படி உள்ளம் ஞான வழியில் சென்றால் அவர் தூய்மையான அந்த கரணத்தை பெற்றவராவார்.

12. இவன்அதி காரி ஆனோன் இந்திரி யங்க ளாலும்
புவனதெய் வங்க ளாலும் பூதவெள திகங்க ளாலும்
தவனம்மூன் றுஅடைந்த வெய்யில் சகித்திடாப் புழுப்போல் வெம்பிப்
பவம்அறு ஞான தீர்த்தம் படிந்திடப் பதறி னானே.

இந்த நான்கு சாதனங்களை பெற்றவரே இந்த நூலைப் படிப்பதற்கு உரிய அதிகாரி ஆவார். சம்சார துன்பங்களுக்கு ஆற்றாதவனே வெய்யிலின் வெப்பத்தை தாங்காது துடிக்கும் புழுப்போல உலக துன்பங்களை நீக்கக் கூடிய ஞான தீர்த்தத்தில் மூழ்க விருப்பம் உள்ளவன் ஆவான்.

**13. ஆனபின் மனைவி மக்கள் அர்த்தஏ டணைகள் மூன்றில்**
**கானவர் வலையில் பட்டுக் கைதப்பி ஓடும் மான்போல்**
**போனவன் வெறுங்கை யோட போகாத வண்ணம் சென்று**
**ஞானசற் குருவைக் கண்டு நன்றாக வணங்கி னானே.**

தனக்கான மனைவி, மக்கள் செல்வம், என்ற மூன்று ஆசைகளில் சிக்கியவன் வேடர்கள் வீசும் வலையில் மாட்டி பின் தப்பித்து செல்லும் மான்போல் எல்லாவற்றையும் நீக்கி நல்ல குருவை தேடி சென்று தரிசனம் செய்து திரிகரண சுத்தியாக வணங்கிப் பணிந்தான்.

**14. வணங்கிநின்று அழுது சொல்வான் மாயவாழ்வு ஏனும்சோ கத்தால்**
**உணங்கினேன் ஐய னேஎன் உள்ளமே குளிரும் வண்ணம்**
**பிணங்கிய கோச பாசப் பின்னலைச் சின்னம் ஆக்கி**
**இணங்கிய குருவே என்னை இரட்சித்தல் வேண்டும் என்றான்.**

பணிந்து எழுந்து நின்று கண்ணீர்மல்க வேண்டி எனது ஆசிரியரே பொய்யான இக்குடும்ப வாழ்க்கை துன்பத்தில் வாடினேன். என் மனது குளிரும்வண்ணம் பஞ்ச கோசங்களில் 'நான்' 'எனது' என்ற பற்றுகளை மின்னல்போல் அழித்து அடியேனை முத்தியில் சேர்க்க வேண்டும் என்று வேண்டினார்.

**15. அன்னிதன் சிசுவை ஐயன் ஆமைமீன் பறவை போலத்**
**தன் அகம் கருதி நோக்கித் தடவிச்சந் நிதிஇ ருத்தி**
**உன்னது பிறவி மாற்றும் உபாயம்ஒன்று உண்டு சொல்வேன்**
**சொன்னது கேட்பாய் ஆகில் தொடர்பவம் தொலையும் என்றான்.**

இப்படி வேண்டிய சீடனை குருவானவர் ஆமையைப் போல் தனது உள்ளத்தில் நினைத்தும், மீனைப்போல் கண்ணால் நோக்கியும், பறவைப்போல் தொட்டும் சீடனது

அறியாமை விலகி இவனது பிறவிக்கு காரணமான சஞ்சித வினைகள் அழிய வேண்டும், என்றும் ஆத்ம விசாரம் இவனுக்கு உதிக்க வேண்டும் என்று ஆசீர்வதித்து பிறவித் துயர் தீர தந்திரம் ஒன்று உபதேசிப்பேன். போதித்த வண்ணம் கேட்டு நடந்தால் தொடர்ந்து வரும் பிறவித் துன்பம் நீங்கும் என்றார்.

16. தொடர்பவம் தொலையும் என்று சொன்னதைக் கேட்ட போதே
தடமடு மூழ்கி னான்போல் சரீரமும் குளிர்ந்துஉள் ஆறி
அடரும்அன்பு ஒழுகு மாபோல் ஆனந்த பாஷ்பம் காட்டி
மடல்மலர்ப் பாதம் மீண்டும் வணங்கிநின்று ஈது சொல்வான்.

ஜனன துன்பம் நீங்கும் என்று கேட்டபோதே விசாலமான குளத்தில் முழுகினவனைப் போல உடலும், உள்ளமும் குளிர்ந்து, ஆனந்த கண்ணீர் பெருக குருவின் பத்ம பாதங்களை மீண்டும் பணிந்து வணங்கி இதனைச் சொல்லத் தொடங்குவான்.

17. சொன்னது கேட்க மாட்டாத் தொண்டன் ஆனாலும் சுவாமி
நின்னது கருணை யாலே நீர்எனை ஆள லாமே
உன்னது பிறவி மாற்றும் உபாயம்ஒன்று உண்டுஎன் றீரே
இன்னதுஎன்று அதைநீ காட்டி ஈடேற்றல் வேண்டும் என்றான்.

உபதேசித்ததைக் கேட்டு நடக்க மாட்டாத அடிமை ஆனாலும் என் குரு நாதரே உங்கள் கிருபையினால் அடியேனை தடுத்தாளலாமே. எனது பிறவியை ஒழிக்கும் தந்திரம் ஒன்று உள்ளது என்று கூறினீர்கள் அந்த தந்திரம் இத் தன்மையதென்று தேவரீர் காண்பித்து காக்கவேண்டினார்.

18. அடங்கிய விருத்தி யான்என்று அறிந்தபின் செறிந்த மண்ணின்
குடம்பையுள் புழுமுன் ஊதும் குளவியின் கொள்கை போலத்
தொடங்கிய குருவும் ஆன்ம சொருபமே மருவ வேண்டி
உடம்பினுள் சீவ னைப்பார்த்து உபதேசம் ஓது வாரே.

விருத்தி அடங்கினவன் இவன் என்று தெரிந்தபின் மண் கூட்டின் உள்ளே குளவி தான் கொண்டு வந்து வைத்த புழு குளவியாக மாற வேண்டி ஊதும் குளவி போல் உபதேசிக்க தொடங்கிய ஆசாரியரும் ஆத்ம ஸ்வருபத்தை சீடன் அடையும் பொருட்டு சீடனின் உள்ளே

இருக்கும் ஆன்மாவை நோக்கி உபதேசம் செய்வார்.

19. வாராய்என் மகனே தன்னை மறந்தவன் பிறந்து இறந்து
தீராத சுழற்காற்று உற்ற செத்தைபோல் சுற்றிச் சுற்றிப்
பேராத கால நேமிப் பிரமையில் திரிவன் போதம்
ஆராயும் தன்னைத் தான் என்று அறியும்அவ் வளவும் தானே.

எனது புத்திரனே ! கேளாய் தனது ஆத்ம சொருபத்தை விசாரித்து அறியாதவன் அறிவினால் ஆராய்ந்து அறியும் ஆத்மாவைப் பிரமமென்று அறியும் வரை ஜனித்து, மரித்து, ஓயாத சுழல் காற்றில் அகப்பட்ட சருகு போல் ஜனன மரணத்திற் சுழன்று நீங்காத கால சக்கரத்தினது சுழற்சியில் சஞ்சரிப்பான்.

20. தன்னையும் தனக்குஆ தாரத் தலைவனை யும்கண் டானேல்
பின்னை அத் தலைவன் தானாய்ப் பிரமமாய்ப் பிறப்புத் தீர்வன்
உன்னைநீ அறிந்தாய் ஆகில் உனக்கொரு கேடும் இல்லை
என்னைநீ கேட்கை யாலே ஈதுஉப தேசித் தேனே.

கூடஸ்தனையும் தனக்கிடமான பிரம்மத்தையும் தரிசிப்பான் ஆயின் பின்பு தானே அப்பிரமம் என்று அறிந்து பிறப்பினை ஒழிப்பான். இவ்வாறு 'உன்னை நீ அறிந்தால் உனக்கு ஒரு கேடும் விளையாது' பிறவித் துன்பம் நீங்க வேண்டும் என்று வேண்டியதால் தான் உனக்கு இதனை உபதேசித்தேன் என்றார்.

21. என்னைத்தான் சடமா உள்ளத்து எண்ணியோ சொன்னீர் ஐயா
தன்னைத்தான் அறியா மாந்தர் தரணியில் ஒருவர் உண்டோ
பின்னைத்தான் அவர்கள் எல்லாம் பிறந்துஇறந்து உழலுவா னேன்
நின்னைத்தான் நம்பி னேற்கு நிண்ணயம் அருளு வீரே.

எனது ஆசிரியரே என்னை யான் அறியாதவனாகக் கருதியோ சொன்னீர் ? தன்னைத் தெரியாத மனிதர் பூமியின்கண் ஒருவர் உளரோ ? அவர்கள் அனைவரும் ஜனன மரணத்தில் சுழலுவானேன் ? தேவரீரை நம்பின அடியேனுக்கு நிச்சயத்தைச் சொல்வீர்.

22. இன்னது தேகம் தேகி இவன்என உணர்வான் யாவன்
அன்னவன் தன்னைத் தான்என்று அறிந்தவன் ஆகும் என்றார்
சொன்னபின் தேகி யார்இத் தூலம்அல் லாமல் என்றான்
பின்னது கேட்ட ஐயர் பீழையும் நகையும் கொண்டார்.

சரீரமானது ( தேகம் ) இத்தன்மையுள்ளது சரீரி (தேகி) இத் தன்மையுள்ளவன் என்று அறிகின்றவன் எவனோ அவன் தன்னைத்தான் அறிந்தவன் என்று குரு உரைத்து அருளினார். அங்ஙனம் போதித்த பின்பு இச் சரீரம் அன்றி சரீரியார் ? என்று கேட்டான் பின்பு அவன் அனுபவத்தைக் கேட்ட ஆசிரியர் துன்பமும் புன்னகையும் கொண்டார்.

23. தேகம்அல் லாமல் வேறே தேகியார் காணேன் என்றாய்
மோகமாம் கனவில் வந்து முளைத்தவன் எவன்நீ சொல்வாய்
சோகமாம் கனவு தோன்றாச் சுழுத்திகண் டவன்ஆர் சொல்வாய்
ஆகநீ நனவில் என்னும் அறிவுதான் ஏது சொல்வாய்.

சரீரத்தை அன்றி வேறாக உள்ள சரீரியர் ? நான் கண்டிலேன் என்றால் மோகமாகிய சொப்பனத்தில் உதித்தவன் யாவன் ? இதனை நீ சொல் மயக்கமாகிய சொப்பனந் தோன்றாத சுழுத்தியில் சூனியமாகத் தரிசித்தவன் யார் ? சொல்வாய். சாக்கிரத்தில் சொப்பனம், சுழுத்தி என்று இரண்டையும் நினைக்கின்ற அறிவுதான் யாது ? அது நீ கருதுகின்ற தேகமா ? அதற்கு வேறானதா ? இதனையும் நீ ஆராய்ந்து சொல் என்றார்.

24. நனவுகண் டதுநான் கண்ட நனவுஉள நினைவு நீங்கி
கனவுகண் டதும்சு ழுத்தி கண்டதும் வேறுஒன் றேபோல்
தினம்அனு பவிப்பது ஒக்கும் தெரியவும் இல்லை சற்றே
மனதினில் உதிக்கும் பின்னே மறைக்கும்அது அருளு வீரே.

தேகம் அல்லாமல் தேகியாகிய ஒரு அறிவுப் பொருள் உள்ளதை தாங்கள் சொப்பன சுழுத்தி திருஷ்டாந்தத்தை வைத்துக் கூறினீர் தேகம் இல்லாமல் தேகி இருப்பதை நான் உணர்ந்தேன். கண் விழித்த உடன் சொப்பனம் மறைந்து தேகமே தோன்றுகிறது தேகியாகிய அறிவுப்பொருள் தேகம் போல் பிரத்தியச்சமாக இல்லை. இதன் உண்மை விளக்கங்களை நான் உணரும்படி உபதேசம் செய்வீராக.

25. தூலத்தின் மரங்கள் காட்டித் தனிப்பிறை காட்டு வார்போல்
ஆலத்தின் உடுக்கள் காட்டி அருந்ததி காட்டு வார்போல்
தூலத்தை முன்பு காட்டிச் சூக்கும சொரூபம் ஆன
மூலத்தைப் பின்பு காட்ட முனிவரர் தொடங்கி னாரே.

பூமியின் கண் உள்ள மரங்களை காண்பித்துத் தனியான மூன்றாம் பிறையைத் தரிசிப்பவர் போலவும், ஆகாயத்தில் உள்ள நட்சத்திரங்களை காட்டி அருந்ததியை காண்பிப்பவர் போலவும், தூலமாயுள்ள தத்துவங்களை முன்னே காட்டி சூட்சும வடிவான பிரம்மத்தைப் பின்பு குருவானவர் விளக்கத் தொடங்கினார்.

26. அத்தியா ரோபம் என்றும் அபவாதம் என்றும் சொல்லும்
உத்தியால் பந்தம் வீடுஎன்று உரைக்கும்வே தாந்தம் எல்லாம்
மித்தையாம் ஆரோ பத்தால் பந்தம்ஆம் அபவா தத்தான்
முத்திஆம் இவ்வி ரண்டின் முந்திஆ ரோபம் கேளாய்.

அத்தியா ரோபம் என்று சொல்லுகின்ற உத்தியினால் பந்தம் எனவும் அபவாதம் என்று சொல்லுகின்ற உத்தியினால் வீடு எனவும் உபநிடதம் அனைத்தும் சொல்லும் ஆதலால் இல்லாத அரோபத்தால் பெத்தமாம் அபவாத்தினால் வீடாம் இவ்விருவகையில் முன்பு அரோபத்தை கேட்டாய்.

27. ஆரோபம் அத்தி யாசம் கற்பனை ஆவ எல்லாம்
ஓர்ஓர்வத் துவினில் வேறே ஓர்ஓர்வத் துவினை ஓர்தல்
நார்உவடு பணியாய்த் தோன்றல் நரன்ஆகித் தறியில் தோன்றல்
நீர்உவடு கானல் தோன்றல் நிறம்தலம் வெளியில் தோன்றல்.

அரோப மென்றும் அத்தியாசமென்றும். கற்பனை என்றும் ஆவன அனைத்தும் ஒவ்வொரு பொருளை வேறான ஒவ்வொரு பொருள் என அறியலாம். கயிற்றினிடத்து பாம்பு தோற்றுதல், கட்டையிடைத்து கள்ளன் தோன்றுதலும் கானலினிடத்து நீர் தோன்றுதல் ஆகாயத் தினிடத்தில் தரமின்மை தோன்றுதல் இதற்கு சான்றுகளாகும்.

28. இப்படிப் போல நாம ரூபங்கள் இரண்டும் இன்றி
ஒப்பாய் இரண்டுஅற்று ஒன்றுஆய் உணர்வுஒளி நிறைவாய் நிற்கும்
அப்பிர மத்தில் தோன்றும் ஐம்பூத விகாரம் எல்லாம்
செப்புகற் பனையி னாலே செனித்தவென்று அறிந்து கொள்ளே.

நாமரூபமான இரண்டு தன்மைகள் இன்றி ஒற்றுமையாவும் துவிதம் இன்றி ஏகமாவும் ஞானப்பிர்காச நிறைவாயும் இருக்கின்ற அந்தப் பிரம்மத்தில் தோற்றா நின்ற பஞ்சபூதம் முதலிய வேறுபாடு அனைத்தும் சொல்லா நின்ற அரோபத்தால் உண்டானவைகள் என்று தெரிவாய்.

29. அதுதான்எப் படிஎன் றக்கால் அநாதிஆம் சீவர் எல்லாம்
பொதுவான சுழுத்தி போலப் பொருந்தும் அவ் வியத்தம் தன்னில்
இதுகால தத்து வப்பேர் ஈசன்உட் பார்வை யாலே
முதுமூல சுபாவம் விட்டு முக்குணம் வியத்தம் ஆமே.

அநாதியாய் உள்ள சீவரெல்லாம் பொதுவான சுழுத்தி போலப் பொருந்தும் அவ் வியந்தந் தன்னில் இது கால தத்துவப் பேர் ஈசனின் பார்வையாலே முதுமூல சுபாவம் விட்டு முக்குணம் வடிவாக தோன்றும்.

30. உத்தம வெளுப்புச் செம்மை உரைத்திடு கறுப்பும் ஆகும்
சத்துவ குணத்தி னோடு ரசோகுணம் தமோகு ணந்தான்
சுத்தமோடு அழுக்கு இருட்டாச் சொல்லுமுக் குணமும் மூன்றாய்
ஒத்துஉள வேனும் தம்முள் ஒருகுணம் அதிகம் ஆமே.

வெண்நிறமான தூயதான சத்துவ குணம் உத்தமும், செம்மை நிறமான, மத்திமமான ரசோ குணமும் அழுக்கான கரு நிறமும், அதமமுடன் இருட்டுமான தமோ குணம் என நாமம் கூறப்பெறும். இம் முக்குணங்களும் ஒன்றாக இருந்தாலும் ஒரு குணம் மேலோங்கி நிற்கும் மற்ற இரண்டும் கீழ்பட்டு இருக்கும்.

31. ஒருவழி இதுஆம் மித்தை ஒருவழி வேறாச் சொல்வர்
மருவும்அவ் வியத்தம் தானே மகதத்வம் ஆகும் அந்த
அருள்மக தத்து வம்தான் அகங்காரம் ஆகும் என்றும்
கரு அகங் காரம் மூன்றாக் காட்டிய குணம்ஆம் என்றும்.

மூலப் பரகிருதியிலிருந்து முக் குணங்கள் தோன்றி சிருஷ்டி உருவாவது ஒரு வகை. வியத்தமே மகத்துவமாம் எனவும் சொல்லிய மகத்துவமே அகங்கார தத்துவமாம் என்றும் கருவாகிய அகங்காரமே முக்குணமாக தோன்றியதாக சொல்லுவார்கள்.

**32. இக்குணங் களிலே விண்போன்று இருக்கும்சிற் சாயை தோன்றும்**
**முக்குணங் களினும் தூய்தாம் முதற்குணம் மாயை ஆகும்**
**அக்குணப் பிரமச் சாயை அந்தரி யாமி மாயை**
**எக்குணங் களும்பற் றாதோன் நிமித்தகா ரணன் ஆம் ஈசன்.**

சத்துவ, இராசத, தாமச என்ற முக்குணங்களில் சத்துவ குணம் மாயை என்று சொல்லப்படும் சத்துவ குணத்தில் தோன்றிய பிரம்மத்தின் பிரதி பிம்பம் அந்தரியாமியாம். மாயா சம்பந்தமான எந்தக் குணங்களும் பற்றாதவனே பஞ்ச பூத பௌதிக சிருட்டிக்கு நிமித்த காரணமாகிய ஈசனாம்.

**33. ஈசனுக்கு இதுசு ழுத்தி இதுவேகா ரணச ரீரம்**
**கோசம்ஆ னந்தம் ஆகும் குணம்இரா சதம்அ வித்தை**
**தேசுஅறும் அவித்தை தோறும் சிற்சாயை சீவ கோடி**
**நாசம்ஆம் உயிர்க்கு அப்போது நாமமும் பிராஞ்ஞன் ஆமே.**

ஈசுவரனுக்கு சத்துவ குண மாயையே சுழுத்தி அவத்தையாகும். இதுவே காரண சரீரமும், ஆனந்தமய கோசமும் ஆகும். இராசத குணம் அவித்தை ஆகும். விளக்க மில்லாத அவித்தைகள் தோறும் தோன்றி உள்ள சித்தின் பிரதி பிம்பமே ஜீவ ராசிகள் ஆகும். இறந்த சுழுத்தியை அபிமானிக்கும் ஜீவர்களுக்கு பிராஞ்ஞன் என்று பெயர்.

**34. அழுக்கொடு பற்றும் சீவர்க்கு அதுவே ஆனந்த கோசம்**
**சுழுத்திகா ரணச ரீரம் சொன்னதுஇம் மட்டும் மோக**
**முழுக்குணத்து இரண்டால் வந்த மூலஆ ரோபம் சொன்னோம்**
**வழுத்துகுக் குமஆ ரோப வழியும்நீ மொழியக் கேளாய்.**

ஈஸ்வரனுக்கு மாயை எப்படி காரண சரீரமாக உள்ளதோ ஜீவனுக்கு அவித்தையே காரண சரீரமாகும். சுழுத்தியே ஜீவனுக்கு ஆனந்தமய கோசமாகும். மூலப் பிரகிருதியில் இருந்து உண்டான சத்துவ குண மாயையாலும், இரசோகுண அவித்தையாலும் உண்டான

காரண சரீர் அத்தியாசத்தை உரைத்தோம் சூட்சம சரீரம் கற்பனையாக உண்டான மார்க்கத்தை யான் சொல்ல நீ கேட்பாயாக.

35. ஏமமா யாவி னோத ஈசனார் அருளி னாலே
பூமலி உயிர்கட்கு எல்லாம் போகசா தனம்உண் டாகத்
தாமத குணம்இ ரண்டு சத்தியாய்ப் பிரிந்து தோன்றும்
வீமமாம் மூடல் என்றும் விவிதமாம் தோற்றம் என்றும்.

மாயை விளையாட்டாக செய்யகூடிய ஈசுவரனின் கிருபையினால் அனுபோக சாதனம் உண்டாகும். பொருட்டு தமோ குணமானது மறைப்பு என்றும் தோற்றம் என்றும் இரண்டு சக்திகளாகப் பிரித்து தோன்றும்.

36. தோற்றும்ஆம் சத்தி தன்னில் சொல்லிய விண்ஆம் விண்ணின்
காற்றதுஆம் காற்றில் தீஆம் கனலின் நீர் நீரின் மண்ஆம்
போற்றும்இவ் ஐந்தும் நொய்ய பூதங்கள் என்று பேர்ஆம்
சாற்றும்மற்று இவற்றின் போக சாதன தனுஉண் டாகும்.

இந்த இரண்டு சக்திகளில் தோற்ற சத்தியிலிருந்து ஆகாயமும், ஆகாயத்தில் இருந்து வாயும் வாயுவிலிருந்து அக்கினியும், அக்கினியில் இருந்து நீரும், நீரில் இருந்து மண் உண்டாகிறது. இந்த பஞ்ச பூதங்களில் இருந்து தனு, அண்ட புவன போகங்கள் உருவான கிரமத்தைக் கேட்பாயாக.

37. ஆதிமுக் குணம்இப் பூதம் அடங்கலும் தொடர்ந்து நிற்கும்
கோதுஇல்வெண் குணத்தில் ஐந்து கூறுஉணர் கருவி ஆகும்
ஓதிய பின்னை ஐந்தும் உளம்புத்தி இரண்டாம் ஞான
சாதனம் ஆம்இவ் ஏழும் சற்குணப் பிரிவி னாலே.

பஞ்ச பூதங்களிலும் சத்துவம், ரசசு தமசு என்ற மூன்று குணங்கள் உள்ளது. மொத்தம் பஞ்ச பூதங்களில் 15 குணங்கள் ( 5 x 3 ) உள்ளது. அதில் பஞ்ச பூதத்தில் உள்ள 5 சத்துவ குணத்தை எடுத்து 10 ஆக்கி 5 பாதியை தனியாக்கி ஞனேந்திரியங்கள் உருவாக்கப்படுகிறது. மீதி 5 பாதியை பஞ்சீகரணம் செய்து 5 கூறுகளான அந்த கரணங்கள் ஆகும். இந்த பத்தும் ஞானசாதனம் ஆகும்.

38. இராசத குணத்தில் வேறிட்டு எடுத்தசுவறு ஐந்தும்
பிராணவா யுக்கள் என்றும் பெருந்தொழில் கருவி என்றும்
பராவிய பெயராம் இந்தப் பதினேழும் லிங்க தேகம்
சுராசுரர் நரர்வி லங்காய்த் தோன்றிய உயிர்கட்கு எல்லாம்.

ரஜோ குணத்தை பத்தாக்கி அதில் ஐந்து பகுதியை வைத்து கர்மேந்திரியங்கள் ஐந்தும் மீதி ஐந்தை வைத்து பஞ்ச வாயுக்கள் உண்டாகின்றன. இந்த பத்தும் முன் கூறிய ஞான சாதனம் பத்தும் ஆக இருபது சாதனங்களும் சூக்கும சரீர தத்துவங்கள் ஆகும். இந்த இருபது சூக்கும சரீரத் தத்துவங்கள் தேவர்கள், அசுரர்கள், மனிதர்கள் விலங்குகள் என அனைத்திலும் உள்ளது.

39. இவ்வுடல் மருவும் சீவன் இலங்குதை சதன்என்று ஆவன்
இவ்வுடல் மருவும் ஈசன் இரணிய கர்ப்பன் ஆவன்
இவ்வுடல் இரண்டு பேர்க்கும் இலிங்கசூக் குமச ரீரம்
இவ்வுடல் கோசம் மூன்றாம் இதுகனா அவத்தை ஆமே.

விட்சேப சத்தியில் இருந்து தோன்றிய சூக்கும சரீரத்தில் குடி புகுந்த ஜீவனுக்கு சைதனன் என்று பெயர். அனைத்து சூக்கும சரீரமும் சேர்ந்த ஈஸ்வரனுக்கு இரணிய கர்ப்பன் என்று பெயர். இந்த சூக்கும சரீரத்தில் விஞ்ஞானமய கோசம், மனோமயகோசம் மற்றும் பிராணமய கோசம் என்ற மூன்று கோசங்கள் உள்ளது.

40. சூக்கும சடம்இம் மட்டும் சொல்லினோம் இப்பால் தூலம்
ஆக்கும் ஆரோபம் தானும் அடைவினில் மொழியக் கேளாய்
தாக்கும்இவ் உயிர்க்குத் தூல தநுவும்போ கமும் உண்டாகக்
காக்கும்அவ் ஈசன் பஞ்சீ கரணங்கள் செய்தான் தானே.

சூட்சம சரீரத்தில் உள்ள ஜீவர்களிலிருந்து ஐந்து தமோ குணங்களை எடுத்து பஞ்சீ கரணம் செய்ததால் தூய பஞ்ச பூதம் தோன்றிற்று இதிலிருந்து தூல சரீரமும், புசிப்பதற்கு உள்ள போக சாதனங்களும் உண்டாகும் விதத்தை கூறுகிறேன் கேட்பாயாக.

41. ஐந்தாபூ தமும்பத்து ஆக்கி அவைபாதி நன்நான்கு ஆக்கி
நந்துதம் பாதி விட்டு நான்கொடு நான்கும் கூட்ட

வந்தன தூல பூதம் மகாபூதம் இவற்றின் நின்றும்
தந்தன நான்காம் தூல தநுஅண்ட புவன போகம்.

சூக்கும பூதத்தில் உள்ள பஞ்ச தமோ குணங்களையும் எடுத்து அதை இரண்டாக்கி ஒரு பாதியை நான்காக்கி அந்த நான்கை தன் அம்சத்தோடு சேர்க்கவே பேரண்டமும், புவனங்களும் ஜீவர்களின் அனுபவத்திற்கு உரிய அன்னம் முதலானவைகள், கருவில் பிறப்பன (சராயுஜம்) முட்டையில் பிறப்பன (அண்டஜம்) வியர்வையில் பிறப்பன (சுவேதஜம்) வேரிலிருந்து தோன்றுவன ( உற்பீஜம் ) என்றும் 4 வகை பிறப்பாகிய தூல சரீரங்களும் ஈசுவரனால் படைக்கப்பட்டன.

42. தூலமே மருவும் சீவன் சொல்லிய விசுவன் ஆகும்
தூலமே மருவும் ஈசன் சொலும்விராட் புருடன் ஆகும்
தூலமே அன்ன கோசம் துன்னும்சாக் கிரஅ வத்தை
தூலகற் பனைஈது என்று தொகுத்தது மனத்தில் கொள்வாய்.

தூல சரீரத்தில் இருக்கும் ஜீவன் விசுவன் என்ற நாமம் கொண்டவன். அத்தூல சரீரத் தொகுதியில் உள்ள ஈசுவரன் விராட் என்னும் நாமம் உடையவர். தூல சரீரம் அன்னத்தால் வளர்வது. எனவே இது அன்னமய கோசமாம். சாக்கிரம் என்ற அவத்தைக்கு இடமாகும் என்பதை மனதில் இருத்திக் கொள்வாயாக.

43. சீரிய ஈச னார்க்கும் சீவர்க்கும் உபாதி ஒன்றேல்
ஆரிய குருவே பேதம் அறிவது எப் படிஎன் றக்கால்
காரிய உபாதி சீவன் காரண உபாதி ஈசன்
வீரியம் மிகுச மட்டி வியட்டியால் பேதம் ஆமே.

ஜீவனுக்கும் ஈஸ்வரனுக்கும் சரீர உபாதி ஒன்று என்றால், இவர் ஈஸ்வரன். இது ஜீவன் என்று எப்படி பிரித்து அறிவது என்றால் காரிய உபாதி உடையது ஜீவன். காரண உபாதி உள்ளவர். ஈஸ்வரன். தனி மரத்தைப் போல் உள்ளவன் ஜீவன் பலகோடி மரங்கள் சேர்ந்த வனத்தைப் போல் உள்ளவர் ஈஸ்வரன் என்பதை உணர்வாயாக.

44. மரங்கள்போல் வியட்டி பேதம் வனம்எனல் சமட்டி பேதம்
சரங்கள்தா வரங்கள் பேதத் தனிஉடல் வியட்டி என்பார்

பரம்பிய எல்லாம் கூட்டிப் பார்ப்பதே சமட்டி என்பார்
இரங்கிய பலசீ வர்க்கும் ஈசர்க்கும் பேதம் ஈதே.

இது ஒரு தனி மரம் அல்லது ஒரு தனி மனிதன் என்று பிரிப்பது வியட்டியாம். அனேக கோடி மரங்கள் ஒன்றாக இருப்பது வனம் ஆதாவது சமட்டி ஆகும். இந்த உலகத்தில் உள்ள எல்லா ஜீவர்களுடைய தூல உடம்புகள் எல்லாம் ஒன்று சேர்ந்து ஈஸ்வரனுக்கு ஒரே விராட்டு சரீரம் என்று சொல்லப்படும் இதுவே துன்பப்படும் பல ஜீவர்களுக்கும், ஈஸ்வரனுக்கும் உள்ள வேறுபாடாகும்.

45. கற்பனை வந்த ஆறு காட்டினோம் காண்ப எல்லாம்
சொற்பனம் போலும் என்றே துணிந்தவன் ஞானி ஆவான்
செல்புதை மழைக்கா லம்போய்த் தெளிந்த ஆகாசம் போலும்
அற்புத முத்தி சேரும் அபவாத வழியும் கேளாய்.

சொப்பனம் போல் கற்பனையாக தோன்றுகிற பிறப்பு, இறப்பு என்கிற சம்சார பந்தத்தை உருவாக்கக்கூடிய ஆரோபம் ஆகிய கிரமத்தை அறிந்தால் இவை அனைத்தும் சொப்பனம்போல் பொய் என்று உணர்ந்து அறிந்தவர்கள் ஞானிகள். மழைக்காலம் நீங்கி தெளிந்த வானம் போல் அனைத்து துன்பங்களும் நீங்கி அற்புதமான முத்தி மோட்சத்தை அடையும் அபவாத வழியினை அறிவாயாக.

46. அரவுஅன்று கயிறுஎன் றாற்போல் ஆள்அன்று தறிஎன் றாற்போல்
குரவன்சொல் உபதே சத்தால் கூறும்நூல் ஒளியைக் கொண்டு
புரம்அன்று புவனம் அன்று பூதங்கள் அன்று ஞானத்
திரம்என்னும் பிரமம் என்று தெளிவதே அபவா தம்காண்.

இது பாம்பு அல்ல கயிறு என்றும். இவ்வடிவம் கள்ளன் அல்ல மரக்கட்டை என்று தெளிவாக உணர்வது அறிவார்ந்த குருவின் உபதேசத்தாலும் சாஸ்திர விசாரணையினாலும் இது சரீரம் அல்ல இது புவனம் அல்ல இவை பஞ்ச பூதங்கள் அல்ல நான் ஜீவன் என்ற உறுதியை போக்கி நான் சிவ அம்சமாகவே உள்ள பிரம்மமே என ஐயம் இன்றி அறிவதே அபவாதமாகும்.

47. படமும் நூலும்போல் செய்த பணியும் பொன்னும்போல் பார்க்கில்
கடமும் மண்ணும்போல் ஒன்றாம் காரிய கரணங்கள்
உடல்முதல் சுபாவம் ஈறா ஒன்றில் ஒன்று உதித்த வாறே
அடைவினில் ஒடுக்கிக் காண்பது அபவாத உபாயம் ஆமே.

காரியமான உலகத்தையும் அதற்கு ஆதாரமான பிரமத்தையும் ஆராய்ந்தால் காரியமான ஆடையும் அதற்கு ஆதாரமாகிய நூலும் அணிகலனும், அதற்கு ஆராதமாகிய பொன்னும். குடமும் அதற்கு ஆதாரமான மண் போலவும் ஒன்றாகுமே அன்றி வேறு வேறு ஆகாது. சரீரம் முதல் அவித்தை வரை ஒன்றில் இருந்து ஒன்று உருவானதை முறையே அறிந்து பார்பது அபவாதமாம்.

48. தூடண தமத்தில் வந்த தோற்றமாம் சத்தி செய்யும்
ஏடணை விகாரம் சொன்னீர் இரண்டுசத் திகள்என் றீரே
மூடலாம் சத்தி செய்யும் மோகமும் சொல்லும் ஐயா
கேடு அறக் குருவே என்னக் கிருபையோடு அருள்செய் வாரே.

தமோ குணமாகிய அஞ்ஞான சத்தியிலிருந்து விட்சேபம், ஆவரணம் என்கிற இரண்டு சத்திகள் உறுவானது என்று உபதேசித்தீர்கள். அதில் தோற்ற சத்தியிலிருந்து உண்டான வரலாறு விளக்கங்களை உபதேசித்தீர்கள் இந்த ஜீவனுக்கு துன்பம் தரும் மூடச் சத்தியில் ( ஆவரணம் ) விளக்கங்களை எனக்கு நன்கு விளங்கும்படி உபதேசிக்க வேண்டும் என்று வேண்டினார்.

49. தான் நிகர் தனக்காம் ஈசன் தனையும்தங் கலைத்தாம் கண்ட
ஞானிகள் தமையும் அன்றி நாஸ்திந பாதி என்னும்
ஊன்இடை உயிர்கள் உள்ளத்து உணர்விழி குருடுஆம் வண்ணம்
வான்நிலம் திசைகள் மூடும் மழைநிசி இருள்போல் மூடும்.

வீட்டுக்குள் உள்ள பொருட்களை இருட்டு மறைப்பது போல் உன் உடம்புக்குள் உள்ள ஆத்ம ஜோதியை மூட சத்தி ( ஆவரணம் ) மறைத்து கொண்டு உள்ளது. உலகம் முழுவதும் நிறைந்து உள்ள சிவத்தையும் மூடி மறைத்துக் கொண்டும் உள்ளது. தீராத பிறப்பு இறப்பு என்கிற துக்கத்தையும் உண்டாக்கி கொண்டு உள்ளது. ஆவரணம் என்கிற மூடச் சத்தியின் தொழில் ஆகும் என்பதை உணர்வாயாக.

50. பூன்றம்ஆம் பிரமத் துக்கும் புறத்துஉள விகாரங்கட்கும்
ஆன்றசூ டஸ்த னுக்கும் அகத்துஉள விகாரங் கட்கும்
தோன்றிய பேதம் சற்றும் தோன்றாமல் மறைத்து மூடும்
ஊன்றிய பவவி யாதி உண்டாக்கும் உபாதி ஈதே.

பரிபூரணமாகிய பிரம்மத்தின் நித்திய தன்மைக்கும் பிரபஞ்சத்தின் அநித்தியத் தன்மைக்கும் சாட்சியாகிய கூடத்தனின் அறிவுத் தன்மைக்கும். உடம்பே நான் என்று கருதும் அகங்காரத்தின் சடத்தன்மைக்கும் உள்ள வேறுபாடு விளங்காதபடி ஆவரண சத்தி மறைக்கின்றது. ஜீவர்களுக்கு பிறவியைக் கொடுப்பது இந்த ஆவரண சத்தியே ஆகும்.

51. ஆதாரம் மறைந்து போனால் ஆரோபம் எங்கே தோன்றும்
ஆதாரம் மறையாது ஆகில் ஆரோபம் இலையே என்றால்
ஆதாரம் சமம்வி சேடம் ஆம்என இரண்டு கூறுஆம்
ஆதாரம் சமம்ஆம் எங்கும் ஆரோபம் விசேடம் ஆமே.

அதிக இருட்டில் கயிறு மறைவது ஆவரண சத்தியினால் பிரமம் மறைந்து போகுமாயின் ஆரோப வடிவ உலகம் எவ்வாறு தோன்றும்?அன்பனே ஆதாரமானது சமம். விசேடம் என இருவகைத்தான் அதிக தேசத்திலும் அதிக காலத்திலும் உள்ள ஆதாரம் சமஆதாரமாம் அற்ப தேசத்திலும் அற்ப காலத்திலும் உள்ள ஆதாரம் விசேட ஆதாரமாம்.

52. சகம் அதில் இதுஎன் சுட்டுஆம் சமானம்தான் மறைந்தி டாது
மிகஇது கயிறுஆம் என்னும் விசேடம்தான் மறைந்து போகும்
அகம்எனும் சமானம் தன்னை அஞ்ஞானம் மறைத்தி டாது
பகர்விசே டம்அதாம் சீவன் பரம்எனும் அதனை மூடும்.

சொற்பமான இருளில் கிடக்கும் கயிற்றில் இது பாம்பு என்று தோன்றிய இடத்து இது என்று சுட்டப்படுவதான சாமானிய வடிவம் மறையாது. இது கயிறு என்ற விசேட வடிவம் மறைந்து விடும். கற்பித விசேட வடிவ ஜீவனது நான் என்ற சாமானிய வடிவ ஆதாரத்தை ஆவரணமானது மறைக்காது. நான் சச்சிதானந்த வடிவப் பிரம்மம் என்னும் விசேட வடிவ ஆதாரத்தை மறைக்கும்.

**53. கேவல நிலைதோன் றாமல் கெடுத்தது பஞ்ச கோசம்**
**சீவனும் சகத்தும் ஆகிச் செனித்தவிட் சேபம் அன்றோ**
**ஆவ ரணம்தா னேபாழ் அனர்த்தம்என்று உரைத்தது ஏதோ**
**மேவரும் குருவே என்று வினாவிடின் மகனே கேளாய்.**

ஜீவ பிரம்ம ஐக்கிய நிலையை பஞ்சகோசங்கள் மறைத்தும். ஜீவனும் ஆகாயம் முதலிய சகத்துமாய் உண்டானது விட்சேப சக்திதான் விட்சேப சத்தியை நிந்தியாது ஆவரண சத்திதானே ஜீவர்கள் உள்ளத்து உணர்வை மறைத்து பாழாக்கிற்று என்றும், ஊன்றிய பவ வியாதி உண்டாக்கும் உபாதி என்று கூறிய காரணம் என்ன ?

**54. தோற்றம்ஆம் சத்தி தானும் துன்பம்ஆம் பவம்ஆ னாலும்**
**ஆற்றலால் முத்தி சேர்வார்க்கு அனுகூலம் ஆகும் காண்நீ**
**ஊற்றம்ஆம் பகற்கா லம்போல் உபகார நிசியால் உண்டோ**
**மாற்றம் என் உரைப்பேன் மைந்தா மறைப்பது மிகப்பொல் லாதே.**

விட்சேப சத்தியானது அவி வேகட்குத் துன்பத்தைத் தரும்பிறவிக்குக் காரணமாயின் விட்சேப சத்தியில் தோன்றிய குரு சாத்திராதிகள் விவேகிகட்கு முத்தி அடைய அனுகூலமாக இருப்பதாம். இராக்காலம் போல் ஆவரண சக்தியையும், பகல் காலம் போல் விட்சேப சத்தியையும் கொள்க. எனவே விட்சேப சத்தியினும் ஆவரண சத்தியே மிகவும் கொடியது.

**55. சுழுத்தியில் பிரள யத்தில் தோற்றம்ஆம் சகங்கள் மாண்டும்**
**அழுத்திய பவம்போம் முத்தி அடைந்தவர் ஒருவர் உண்டோ**
**முழுத்தவிட் சேபம் எல்லாம் முத்தியில் கூட்டு கிற்கும்**
**கொழுத்தஆ வரண முத்தி கூடாமல் கெடுத்த கேடே.**

நித்தியப் பிரளய சுழுத்தியிலும் பிரளய காலத்திலும் விட்சேப சத்தியின் காரணமான பிறவித் துன்பம் நீங்கி முத்தியை அடைந்தவர் ஒருவரும் இலர் முழுமையான விட்சேப சத்தியின் காரியத்தினால் முத்தி கிட்டும் ஆவரண சத்திதான் முத்தியை கெடுக்கும்.

56. சுத்தியில் வெள்ளி போலத் தோன்றிய தோற்றம் ஆன
சத்தியும் பொய்யே என்றால் சத்திசா தனமா வந்த
முத்தியும் பொய்யாம் என்னில் மோகநித் திரைவி லங்கால்
நித்திரை தெளியு மாபோல் நிருவாண நிலைமெய் ஆமே.

கிளிஞ்சலில் வெள்ளிபோல் தோன்றிய விட்சேப சத்தியின் காரியமான குரு சாஸ்திராதிகள் பொய் என்றால் கனவில் கண்ட புலி முதலிய விலங்குகள் நித்திரை தெளிந்து சாக்கிரம் வருவது போல் விட்சேப சத்தியின் காரியமான குரு சாஸ்திராதிகளால் உண்டாகும் முத்தியும் சத்தியமாகும்.

57. இப்பாரில் நஞ்சை நஞ்சால் இரும்பினை இரும்பால் எய்யும்
அம்பினை அம்பால் பற்றும் அழுக்கினை அழுக்கால் மாய்ப்பர்
வம்புஇயல் மாயை தன்னை மாயையால் மாய்ப்பர் பின்னைத்
தம்பம்ஆம் அதுவும் சவச் சவம்சுடு தடிபோல் போமே.

இப்பூ உலகில் நஞ்சுக்கு நஞ்சே மருந்து ஆவது போலும் இரும்பை இரும்பால் ஆன அரத்தால் அறுத்து அழிப்பது போலும். அம்பை வேறு அம்பால் வெல்வது போலும் துணியில் உள்ள அழுக்கை உழ மண்கொண்டு நீக்குவது போல் அசுத்த மாயையைச் சுத்தமாயையால் கெடுப்பார்கள். அசுத்த மாயையும் பிணஞ்சுடு தடிபோல் அசுத்த மாயையோடு அழிந்துபோகும்.

58. இந்தமா யையினால் சீவர்க்கு ஏழுஅவத் தைகள் உண்டு ஆகும்
அந்தஏழ் அவத்தை தம்மை அடைவினில் மொழியக் கேளாய்
முந்தஅஞ் ஞானம் மூடல் முளைத்தல்கா ணாத ஞானம்
சந்ததம் கண்ட ஞானம் தழல்கெடல் குளிர்மை ஆதல்.

சுத்த அசுத்த மாயையால் ஜீவர்களுக்கு ஏழு அவத்தைகள் உண்டாகின்றன 1) அஞ்ஞானம் 2) ஆவரணம் ( மறைத்தல் ) 3) விட்சேபம் (தோன்றல் ) 4)பரோட்ச ஞானம் (கேள்வி ) 5) அப ரோட்ச ஞானம் ( பிரத்தியச்சம் ) 6 ) சோக நிவர்த்தி ( துன்பம் அழிதல்) 7) நிரங்குச திருப்தி ( தடையல்லா மகிழ்ச்சி ) என்பன அந்த ஏழு அவத்தைகள்.

59. பிரமம்ஆம் தனைம றந்த பேதைமை யேஅஞ் ஞானம்
பரன்இலை காணோம் என்று பகர்தல்ஆ வரண மூடல்
நரன்ஒரு கருத்தால் சீவன் நான்என முளைத்தல் தோற்றம்
குரவன்வாக் கியத்தால் தன்னைக் குறிக்கொளல் பரோட்ச ஞானம்.

பிரம்ம ஸ்வரூபமாகிய தன்னை அறியாமை அஞ்ஞானமாம். பிரமம் இல்லை, இருந்தால் அது விளங்கும், இல்லாமையால் விளங்கவில்லை என்று சொல்லுதல் ஆவரணமாம். தன்னை கர்த்தா போன்ற தன்மை உடைய ஜீவன் என்று நினைப்பது விட்சேபமாமம். ஆசிரியரின் போதனையால் பிரம்மம் உண்டு என்று தெளிவதே பரோட்ச ஞானமாம்.

60. தத்துவ விசாரம் செய்து சகலசந் தேக மும்போய்
அத்துவி தம்தான் ஆதல் அபரோட்ச ஞானம் ஆகும்
கர்த்தனாம் சீவ பேதம் கழிவதே துக்கம் போகல்
முத்தனாய் எல்லாம் செய்து முடிந்ததுஆ னந்தம் ஆமே.

நீயே பிரமம் என்று தத்துவ விசாரம் செய்து சகல சந்தேகமும் நீங்கி அத்துவிதப் பிரம்மமே தானாக விளங்குதல் அபரோட்சஞானமாம். அகம்பாவமான சீவன், ஈஸ்வர பேதம் நீங்குதல் துக்க நிவர்த்தியாகும். சகல துக்கங்களில் இருந்து விடுபட்டு செய்யதக்க செயல்கள் அனைத்தையும் செய்து அடையத் தக்கன அனைத்தும் அடைந்தேன் என திருப்தி அடைந்து இருப்பதே தடையற்ற ஆனந்தமாம்.

61. இதுநினக்கு அறியும் வண்ணம் இப்படி ஒருதிட் டாந்தம்
புதுமையாம் கதைகேள் பத்துப் புருடர்ஓர் ஆற்றை நீந்தி
உதகதீ ரத்தில் ஏறி ஒருவன்ஒன் பதுபேர் எண்ணி
அதனொடு தசமன் தான்என்று அறியாமல் மயங்கி நின்றான்.

ஒருவனுக்கே ஏழு அவத்தைகள் உண்டு. என்பது உனக்கு தெரியும்படி வியப்பான ஒரு கதை கேள். பத்துபேர் ஒரு நதியை நீந்தி கரையேறினர். ஒருவர் ஒன்பது பேரை எண்ணி தான் பத்தாமவன் என்று தெரியாமல் பிரமித்து நின்றான் என்பதுபோல்.

62. அறியாத மயல்அஞ் ஞானம் அவன்இல்லை காணோம் என்றல்
பிறியாஆ வரணம் ஆகும் பீழைகொண்டு அழல்விட் சேபம்
நெறியாளன் தசமன் உண்டு நிற்கின்றான் என்ற சொல்லைக்
குறியாக எண்ணி நெஞ்சில் கொள்வது பரோட்ச ஞானம்.

ஒன்பது பேரை எண்ணி பின் தன்னைச் சேர்த்து எண்ணாமல் விட்டது அஞ்ஞானம் பத்தாமவன் இல்லை என்று கருதியது ஆவரணமாம். பத்தாமவன் ஆற்றோடு போய்விட்டான் என்று அழுவது விட்சேபமாம் வழிப்போக்கள் பத்து பேரும் உள்ளீர்கள் என்று சொன்னதை கேட்ட போது உண்டான ஞானமே பரோட்ச ஞானமாம்.

63. புண்ணிய பதிகன் பின்னும் புருடர்ஒன் பதின்மர் தம்மை
எண்ணும்நீ தசமன் ஆவை என்னவே தன்னைக் காணல்
கண்ணினில் கண்ட ஞானம் கரைதல்போ வதுநோய் போதல்
திண்ணிய மனதில் ஐயம் தெளிதல் ஆனந்தம் ஆமே.

புண்ணியவான் ஆன வழிப் போக்கன் மீண்டும் ஒன்பது பேரை எண்ணி தனியே நிறுத்தி நீ பத்தாமவனாக இருக்கிறாய் என்று உணர்த்தியதும் தன்னைக் கண்ட ஞானம் அபரோட்ச ஞானமாம். பத்தாமவன் நதியில் இறந்தோன் என்று அழுத அழுகை நின்றதே துக்க நிவர்த்தியாம் சந்தேகம் நீங்கியதே தடையற்ற ஆனந்தமாம்.

64. தசபுமான் தனைக்கண் டாற்போல் சற்குரு மூர்த்தி யேஎன்
நிசவடி வினையான் காண நீர்காட்டல் வேண்டும் என்றான்
கசிவெறும் இலட்சி யார்த்தம் துவம்பதம் தற்ப தங்கட்கு
அசிபத ஐக்யம் செய்யும் அதுசெயும் உண்மை கேளாய்

என் உண்மை வடிவான ஆன்மாவை பிரம்மமாக நான் அறியச் செய்ய வேண்டும் என்று சீடர் கேட்க. 'நீ அது' என்னும் 'தத்துவமசி' என்ற சாம வேத வாக்கியத்தின்படி உன் உடலில் உள்ள வாச்சிய இலட்சியங்களைப் பிரித்து உணர்வதே துவம்பத விசாரமாம் உடம்பு,

உடம்பிற்கு புறத்தில் உள்ள உலகத்தையும் அதற்கு ஆதாரமாக உள்ள பரமாத்மாவாகிய அந்த இலட்சியத்திற்குள்ள 9 வாச்சியங்களைப் பிரித்து அறிவதே தற்பதவிசாரமாம். இந்த இரண்டு பதங்களுக்கு காரணமான அசிபத இலட்சியமாகிய பரப் பிரம்மத்தையும் அதன் 9 வாச்சியங்களை பிரித்து அறிவதாலேயே உன்னுடைய நிசவடிவமாகிய அந்த சொருபத்தை அபரோசமாக அறிந்து ஆனந்தத்தை அடையும் மார்கத்தை கூறுகிறேன்.

65. விண்ஒன்றை மகாவிண் என்றும் மேகவின் என்றும் பாரில்
மண்ஒன்று கடம்விண் என்று மருவிய சலம்விண் என்றும்
எண்ணும்கற் பனைபோல் ஒன்றே எங்கும்ஆம் பிரமம் ஈசன்
நண்ணும்கூ டஸ்தன் சீவன் நான்குசை தந்யம் ஆமே.

மேலே உள்ள ஆகாயமானது மகா ஆகாயம், மேக ஆகாயம், மேகஜல பிரதிபிம்ப ஆகாயம் எனவும். ஒரு குடத்தில் தோன்றும் ஆகாயம் கட ஆகாயம் என்றும் குடத்து நீரில் தோன்றும் ஆகாயம் கடஜல பிரதிபிம்ப ஆகாயம் என கற்பனையாய் நான்காக தோன்றுவது போல் பரிபூரணமான பிரம்மம் ஒன்றாக இருந்தும். பிரம்மம். ஈஸ்வரன், கூடத்தன், ஜீவன் என்று கற்பனையாக நான்கு சைதன்யமாகத் தோன்றுகின்றது.

66. பூச்சிய ஈசன் சீவன் புகல்பதம் இரண்டி னுக்கும்
வாச்சியம் லட்சி யந்தான் மலம்இலாப் பிரமம் ஆன்மா
காய்ச்சிய பாலில் நெய்போல் கலந்துஒன்றாம் கடைந்து எடுக்கும்
ஆச்சியம் என்ன உன்னை அறிந்துநீ பிறிந்து கொள்ளே.

மகா வாக்கியத்தில் சொல்லப்படும் தத்பத துவம்பதங்கள் என்ற இரு பதங்கட்கும் வாச்சியார்த்தமானவை அரோபமான ஜீவ ஈஸ்வரனாம் இலச்சியார்த்தமானது நிர்மலமான பிரம்ம கூடஸ்தராம். காய்ச்சின பாலில் வெண்ணெய்ப் போலச் ஜடத்தில் சேர்ந்து ஒருமித்து இருக்கின்ற ஆத்மாவைத் தரிசித்து மத்தினால் கடைந்து எடுக்கப்படும் வெண்ணெய் போல விவேகத்தால் உன்னை நீ அறிந்து கொள்.

67. பிறிவதுஎப் படிஎன் றக்கால் பிணம்ஆகும் உடல்நான் என்னும்
அறிவினைக் கொல்லல் வேண்டும் ஐம்பூத விகாரம் அன்றோ
வெறியதுஓர் துருத்தி மூக்கின் விடுவது போல்உன் மூக்கால்
ஏறிபிரா ணனும்நீ அல்லை இராசத குணவி காரம்.

அநாத்மாவை நீக்குவது எங்ஙனம் எனில் சவமாய் சிதைகின்ற தேகம் அன்னமயக் கோசமான தூல சரீரத்தை ஆன்மா என்று கருதும் மயக்கத்தை அழிக்க வேண்டும். அந்த சரீரம் பஞ்சபூத காரியம் ஆகும். தோல் துருத்தி காற்றை விடுவது போல மூக்கின் வழி வீசும் பிராண வாயும் ரசோ குணத்தின் விகாரம் ஆதலால் அதுவும் நீ இல்லை.

68. கரணமாம் மனது புத்தி கருத்தாவாம் அவைஆன் மாவோ
தரம்உள இரண்டு கோசம் சத்துவ குணவி காரம்
வரம்அறு துயில்ஆ னந்த மயனையும் நான்என் னாதே
விரவிய தமஅஞ் ஞான விருத்தியின் விகார மாமே.

அந்தக் கரணமான மனமும். அகம்பாவமாகிய புத்தியும் பேதமுள்ள மனோ மயகோசமும், விஞ்ஞான மய கோசமும் நிலையில்லாத சொப்பனமும் சத்துவகுணவிகாரமாம். அவ்விரண்டும் ஆத்மா அல்ல. பொருந்திய தமோ ரூபமான அவித்தியா விருத்தியின் விகாரமாம். ஆதலால் ஆனந்தமய கோசனான ஜீவனை ஆத்மா என்று கருதாதே.

69. சத்தொடு சித்து ஆனந்தம் சமம்திரம் சாட்சி ஏகம்
நித்தியம் வியாபி ஆன்மா நீஅதுவா அறிந்து
பொத்தொடு சடம்துக் காதி பொருந்துபே தங்கள் ஆன
குத்திர பஞ்ச கோசக் குகைவிட்டு வெளியில் ஆவாய்.

சத்தும் சித்தும், ஆனந்தமும், சமமும், ஸ்திரமும், சாட்சியாவும். ஏகமாயும், நித்தியமும் பூரணமும் ஆகி விளங்குவது ஆத்ம ஸ்வரூபமாகவே உன்னை அறிந்து கொள்வாய் எனவே

கூடஸ்தனே, பிரம்மம், பிரம்மமே கூடஸ்தன் என அத்துவதே ஸ்வரூபமாகத் தரிசித்து அசத்து, சடம், துக்கம் முதலான பேதங்களைப் பொருந்தி விபரீத தன்மை கொண்ட வஞ்சகம் பொருந்திய பஞ்ச கோசமாகிய தேகத்தை நீக்கி வெளிப்படுவாயாக. !

**70. பஞ்சகோ சமும்விட்டு அப்பால் பார்க்கின்ற பொழுது பாழே**
**விஞ்சியது அதுஅல் லாமல் வேறுஒன்றும் தெரியக் காணேன்**
**அஞ்சன இருளை யோநான் அகம்என அனுப விப்பேன்**
**வஞ்சம்இல் குருவே என்ற மகன்மதி தெளியச் சொல்வார்.**

ஐந்து கோசமான மூன்று தேகத்தையும் நீக்கி அப்பால் கவனித்தால் சூன்யமே வியாபித்து உள்ளது. ஆதலால் காரிருள் போன்ற சூன்யத்தையா நான் ஆன்மா என்று அனுபவிப்பேன் என்று கேட்ட சீடன் அறிவு தெளியும் படி குரு உபதேசிக்கலானார்.

**71. முன்புகல் தசமன் புத்தி மோகத்தால் எண்ணி எண்ணி**
**ஒன்பது பேரைக் கண்ட ஒருவனாம் தனைக்கா ணாத**
**பின்புஅவன் இடையில் கண்ட பெரியபாழ் அவனோ பாராய்**
**அன்புஉள மகனே காண்பது அடங்கலும் காண்பான் நீயே.**

புத்தி மயக்கத்தினால் ஒன்பது பேர்களை எண்ணி தன்னை பத்தாமானவனாக அறியாத போது அவனிடத்து அவனால் காணப்பட்ட பெரும் சூன்யம் அவன் ஆவானா ? அவன் சூன்யம் ஆக மாட்டான். அதுபோல் உன்னால் காணப்பட்ட சூனியம் நீ அல்ல எல்லாவற்றையும் காணும் சித்துப் பொருளான நீயே ஆன்மா ஆகும் என்றார்.

**72. தூலசூட் சுமஅஞ் ஞானம் தோன்றும்மூன்று அவத்தை தாமும்**
**காலம்ஓர் மூன்றும் சன்மக் கடல்எழும் கல்லோ லங்கள்**
**போலவே வந்து வந்து போனஎத் தனைஎன் பேன்நான்**
**ஆல்அமர் கடவுள் ஆணை அவைக்குஎலாம் சாட்சி நீயே.**

தூலம், சூட்சமம், காரணம், ஆகிய மூன்று சரீரங்களும், சரீரங்களில் உண்டாகும் சாக்கிரம் சொப்பனம், சுழுத்தி என்ற மூன்று அவத்தைகளும் கடந்த காலம் எதிர்காலம், நிகழ்காலம் என்ற முக்காலமும் பிறவியாகியக் கடலில் உண்டாகும் அலைகள் போல உன்னிடத்தில் தோன்றித் தோன்றி அழிந்ததற்கு ஓர் அளவே இல்லை கல்லால மரத்தின் கீழ் வீற்றிருந்து அருளும் குரு தட்சிணாமூர்த்தியின் மேல் ஆணை அவை அனைத்திற்கும் நீ சாட்சி ஆவாய்.

73. எல்லாம்கண்டு அறியும் என்னை ஏதுகொண்டு அறிவேன் என்று
சொல்லாதே சுயமாம் சோதிச் சுடருக்குச் சுடர்வேறு உண்டோ
பல்லாம்முன் தசமன் தன்னைப் பார்ப்பதும் தனைக்கொண் டேதான்
அல்லாமல் பதினொன் றானும் அவன்இடத்து உண்டோ பாராய்.

சுயம்பிரகாசமான அறிவாகிய உன்னை நீ அறிவதற்கு வேறு ஒரு பிரகாசம் தேவையில்லை. பத்தாமவன் தன்னை அறிந்து அவனாலேயே அன்றி வேறாக பதின்ஒன்றாமவன் இருக்கிறானா ? இல்லை அல்லவா அதுபோல் நீ உன்னை அறிவதற்கு வேறு பிரகாசம் வேண்டாம் என்பதை உணர்ந்து அறிவாய்.

74. அறிவுக்கும் அறிவு செய்யும் அறிவுவேறு உண்டுஎன்று எண்ணும்
அறிவுஅற்ற குதர்க்க மூடர்க்கு அனவஸ்தை பலமாய்த் தீரும்
அறிபடும் பொருள்நீ அல்லை அறிபடாப் பொருள்நீ அல்லை
அறிபொருள் ஆகும் உன்னை அனுபவித்து அறிவாய் நீயே.

அறிவு வடிவமான உன்னைக் காண்பதும் வேறோரு ஞானத்தால் என்பது மூடத்தனம். அறிபடு பொருளாகிய உலகம் நீ அல்ல. அறிபடாப் பொருளாகிய மாயையும் நீ அல்ல. நீ இவ்விரண்டிற்கும் வேறாய் சுயம்பிரகாசமான அறிவு வடிவாய் இருக்கின்றாய் உன்னை நீயே உணர்ந்து உன் சுய வடிவத்தை அனுபவித்து அறிய வேண்டும்.

75. மதுரமாம் கட்டி சுட்ட மாப்பணி யாரம் எல்லாம்
மதுரம்ஆக் கியஅ தற்கு மதுரம்தான் சுபாவம் அன்றோ
அதுஇது எனும்ச டங்கள் அறிவாக அறிவைத் தந்தே
அதுஇது இரண்டும் ஆகா அகம்பொருள் அறிவாய் நீயே.

இனிப்பான வெல்லம் சேர்த்து செய்த பலகாரங்களை இனிக்க செய்வது வெல்லத்தின் இனிப்பே காரணம். அதுபோல் காரண வடிவ மாயை, காரிய வடிவ உலகம் என்பதை விளக்கும் அறிவு வடிவமே நீ மாயை, உலகம் என்னும் இரண்டும் தானாகாமல் அவற்றிற்கு வேறான அறிவாகிய நீயே அகம் என்பதன் இலட்சியார்த்தமாய் இருக்கின்றாய்.

76. இந்தநீ துவம்ப தத்தின் இலட்சியப் பொருளாம் என்றும்
பந்தம்இல் பிரம மேதற் பதந்தனில் இலட்சி யார்த்தம்
அந்தமாம் சீவன் ஈசன் அவர்களே வாச்சி யார்த்தம்
சந்ததம் பேதம் ஆவார் தமக்கு அயிக் கியம்கூ டாதே.

மூன்று சரீரங்களுக்கு அன்னியமாய் மூன்று அவத்தை களுக்கும் சாட்சியாக பஞ்ச கோசங்களுக்கு அப்பாற்பட்டதாய் அகம் பதத்தின் இலட்சியார்த்தமாய் உள்ள நீயே துவம்பத லட்சியார்த்தமாம். பிரம்மமே தத்பதத்திற்கு இலட்சியார்த்தமாம் ஜீவன். ஈஸ்வரன், துவம்பத தத்பதங்களின் வாச்சியார்த்தம் ஜீவனுக்கும், ஈஸ்வரனுக்கும் ஐக்கியம் ஒரு போதும் சித்திக்காது.

77. பேதம் ஆ னதுவும் கேளாய் பெயராலும் இடங்க ளாலும்
ஓதுஅரும் உபாதி யாலும் உடலாலும் உணர்வி னாலும்
பூதலம் விசும்பு போலப் பலதூரம் அகன்று நிற்பர்
ஆதலால் இவர்க்குஎந் நாளும் ஐக்கியம் என் பதுகூ டாதே.

ஜீவன், ஈஸ்வரன், என்ற பெயர் காரணத்தாலும், அண்டம் பிண்டம் என்ற இடத்தாலும் காரிய காரண உபாதியாலும் வியட்டி சமட்டி என்னும் சரீர அபிமானத்தாலும், கிஞ்சிஞ்ஞன் சர்வஞ்ஞன் என்ற உணர்வுகளாலும் ஜீவ ஈஸ்வர பேதம் உண்டாயிற்று இவ்வாறு வேறுபட்டு இருப்பதாலும் இருவருக்கும் இடையே ஐக்கியம் என்பது சித்தியாது.

**78. வடநூல்வல் லவர்கள் சொல்லும் வாசகப் பொருள்சே ராமல்**
**இடர்ஆகில் பொருள் ஆம் வண்ணம் இலக்கணை உரையால் கொள்வார்**
**திடமான அதுவும் மூன்றாச் செப்புவார் விட்டது என்றும்**
**விடல்இலாதது என்றும் விட்டு விடாதது என்றும்பே ராமே.**

சாத்திரங்கள் சொல்லும் வாச்சியார்த்தங்கள் பொருந்தாது எனில் அவை விரோதமின்றி அர்த்தமாகும்படி இலட்சணா விருத்தியினால் பொருள் கொள்கின்றனர். திடமான அந்த இலட்சனை மூன்று வகையாகும். அவை முறையே விட்ட லட்சனை, விடாத லட்சனை, என்றும் விட்டு விடாத லட்சனை என்று பெயர் பெறுவனவாம்.

**79. கங்கையில் கோஷம் என்றும் கருப்புச்சேப்பு ஓடுது என்றும்**
**தங்கிய சோயம் தேவ தத்தன் என்றும் சொல் வார்கள்**
**இங்குஉதா ரணங்கள் ஆக்கி இந்தமூன்று உரைக ளாலே**
**துங்கநூல் விரோத மான சொல்எலாம் பொருளாம் தானே.**

ஆற்றின் கரையில் கிராமம் உள்ளது என்பது விட்ட இலட்சனைக்கும் கருப்பு நிறக சிவப்பு ஓடுகின்றது என்பது விடாத இலட்சனைக்கும் அந்த இந்த தேவ தத்தன் என்பது விட்டுவிடாத இலட்சனைக்கு உதாரணங்கள் ஆகும். இந்த இலட்சிணா வாக்கியங்களால் பெருமை உடைய சாத்திரங்களில் விரோதம் உடைய வாக்கியம் எல்லாம் தாமே வெளிப்படும்.

**விட்ட இலட்சனை:** வாக்கியார்த்தப் பொருளை விட்டுவிட்டு வாக்கியார்த்தத்தின் சம்பந்தமான வேறு பொருளை உணர்த்துவது. ஓடும் ஆற்று வெள்ளத்தில் கிராமம் இருக்காது அது கரைமேல் உள்ளதை உணர்த்துவது.

விடாத இலட்சனை : கருப்பு நிற பசுமாடு நிறக சிவப்புநிறக் குதிரை ஓடுகின்றது என்பதில்

கருப்பு, சிவப்பு என்பவை நிறங்களை விடாமல் நிறங்களை உடைய பொருளை உணர்த்துகின்றது. வாக்கியார்த்தத்தை விடாமல் அதனோடு சம்பந்தப் பட்டிருக்கும் பொருளின் அர்த்தத்தை உணர்த்துவது விடாத இலட்சனை ஆகும்.

**விட்டு விடாத இலட்சனை:** வாக்கியார்த்தத்தில் அர்த்தம் செய்ய வேண்டிய தற்கு தேவையற்ற பாகத்தை நீக்கிவிட்டு. தேவையான மற்ற பாகத்தைப் பொருளாக கொள்வது விட்டு விடாத இலட்சனை. முன்னர் காசியில் பார்த்த அரசன் பின் நாளில் ராமேஸ்வரத்தில் சாமியாராக இருந்தார். முன் குறித்த காலம், இடம் தொழில் தற்போது மாறுபட்டு இருந்தாலும் அதே நபர் என்பதை மட்டும் விடாமல் இவன் என்று பொருள் கொள்கிறோம் இதுவே விட்டுவிடாத இலட்சனையாம்.

**80. பன்னிய ஸோயம் என்னும் பதங்களின் வாச்சி யார்த்தம்**
**அன்னிய தேசம் காலம் அவன்இவன் என்ப எல்லாம்**
**சொன்னஇவ் விரோதம் விட்டுத் தொடர்இலக் கியம்வி டாமல்**
**உன்னிடில் தேவ தத்தன் ஒருவனை வெளியாக் காட்டும்.**

அந்த இந்த தேவதத்தன் அந்த இந்த என்னும் பதங்களின் வாக்கியார்த்தம் தூர தேசம், சமீப தேசம், கடந்த காலம், நிகழ்காலம் அந்த தேவதத்தன் இந்தத் தேவ தத்தன் என்பதை ஒன்றுக்கு ஒன்று வேறுபாடு கொண்டதாக உள்ளது. இவ்வாறு மாறுபட்ட வாக்கியார்த்தங்களை எல்லாம் விட்டு அவற்றை அனுசரித்து உள்ள இலட்சியார்த்தம் என்றும் சரீரத்தை மட்டும் விடாது சிந்தித்துப் பார்த்தால் வேறுபாடு இல்லாத தேவ தத்தன் என்றும் ஒரு நபரை பிரத்தியட்சமாய்க் காட்டும்.

**81. தத்துவம் என்னும்ப தங்கள் பிரமம் ஆய்ச் சாட்சி ஆன**
**வத்துவை விடாமல் பேத வாச்சியார்த் தத்தை விட்டு**
**நித்தமும் அதுநீ யாகும் நீஅது ஆகும் என்னும்**
**அர்த்தமும் அகண்டம் என்றே அசிபத ஐக்கியம் காட்டும்.**

தத் + துவம் + அசி (அது நீ ஆக இருக்கிறாய்) என்ற மகா வாக்கியத்தில் பிரம்மமும், சாட்சியாகவும் உள்ள சுயம்பிரகாசமான லட்சியார்த்தத்தை விடாமல் ஜீவன், ஈஸ்வரன் என்னும் பேத தர்மங்களை உடைய வாச்சியார்த்தத்தை விட்டுவிட உணர்த்தும் பிரம்மமே நீயாகும். நீயே பிரம்மம் ஆகும் என்ற அசி பதமும் பிரம்மம் ஏகமே என்று ஐக்கியத்தை உணர்த்தும்.

82. கடல்நீரில் மேக நீரில் கண்டவான் இரண்டும் பொய்யே
குடவானும் பெரிய வானும் கூடிஒன்று ஆம்எப் போதும்
இடமான பிரமம் சாட்சி இரண்டும் எப்போதும் ஏகம்
திடமாகச் சுவானு பூதிச் சிவோகம்என்று இருத்தி டாயே.

குடத்து தண்ணீரில் தோன்றும் ஆகாசமும், மேக நீரில் தோன்றுகின்ற ஆகாயமும் மகா ஆகாசமும் எப்போதும் பேதமின்றி ஒன்றே ஆகும். சர்வ வியாபகமான பிரம்மமும், சாட்சியும் ஒன்றே ஆகும். இந்த ஐக்கிய அனுபவம் நிச்சயம் ஆகும். பிரம்மமே 'நான்' 'நானே' பிரம்மம் என்று அப்பியாசம் செய்து பிரம்ம அனுபவத்தில் திளைத்து நிலை பெற்று இருப்பாய்.

83. தஞ்சமாம் குருவும் சொன்ன தத்துவ வழிதப் பாமல்
பஞ்சகோ சமும்கடந்து பாழையும் தள்ளி உள்ளில்
கொஞ்சமாம் இருப்பும் விட்டுக் கூடஸ்தன் பிரமம் என்னும்
நெஞ்சமும் நழுவி ஒன்றாய் நின்றபூ ரணத்தைக் கண்டான்.

தத்துவ நெறி தவறாமல் பஞ்சகோசங்கள் தான் அல்ல என்று ஒதுக்கி சூன்யமும் தான் அல்ல என்று ஒதுக்கி, அகத்தில் சாட்சியே தான் என்று அறிந்து நிலையை விட்டு நான் பிரம்மமாய் இருக்கிறேன் என்னும் அகண்டாகார விருத்தி நீங்கி ஏக பரிபூரணமான பிரம்ம அனுபவ நிலையை சீடன் அடைந்தார்.

84. அனுபவஆ னந்த வெள்ளத்து அழுந்தியே அகண்டம் ஆகித்
தனுகர ணங்கள் ஆதி சகலமும் இறந்து சித்தாய்

மனதுபூ ரணமாய்த் தேக ம்ஆனசற் குருவும் காண
நனவினில் சுழுத்தி ஆகி நன்மகன் சுபாவம் ஆனான்

அநுபவமாய் உள்ள ஆனந்தக் கடலில் மூழ்கி அகண்டமாய் சரீரம் இந்திரியங்கள் ஆகிய எல்லாம் அழியப் பெற்றாய். அறிவே வடிவமாகி மனம் பரிபூரண நிலை அடைந்து திருவருளே திருமேனியாக உள்ள சற்குருவும் காணுமாறு நனவில் சுழுத்தியாகிய சமாதியை அடைந்து நல்ல சீடன் ஆனவன் தனது சுபாவ வடிவம் பெற்றான்.

85. அனிமகன் ஷெடும்போது இவ்வாறு ஆனபின் மனது மெள்ள
வெளியில் வந்திட உணர்ந்தான் விமலதே சிகனைக் கண்டான்
துளிவிழி சொரியப் பாதம் தொழுதுவீழ்ந்து எழுந்து சூழ்ந்தான்
குளிர்முகச் சுவாமி கேட்கக் கும்பிட்டு நின்று சொல்வான்.

சமாதி யோகத்தில் இருந்த சீடன் பிராரத்த கன்மத்தால் சமாதி நிலையில் இருந்து மீண்டு குருவை வணங்கினார். அவரை வலம் வந்து கை கூப்பி குருவிடம் உபதேசம் பெற நின்றார்.

86. ஐயனே எனதுஉள் ளே நின்று அனந்தசன் மங்கள் ஆண்ட
மெய்யனே உபதே சிக்க வெளிவந்த குருவே போற்றி
உய்யவே முத்தி நல்கும் உதவிக்கோர் உதவி நாயேன்
செய்யுமாறு ஒன்றும் காணேன் திருவடி போற்றி போற்றி.

குருவே எனது சித்தத்தில் பல பிறவிகளில் இருந்த மல விட்சேப தோஷங்களை நீக்கி என்னை ஆட் கொண்ளர்கள். தத்துவ ஞானத்தை உபதேசித்தீர்கள் நான் கடைத்தேற எனக்கு மோட்சத்தை அளித்த உங்களுக்கு நாயினும் கீழ் பட்ட நான் என்ன கைமாறு செய்வேன் உங்கள் திருவடிக்கு வணக்கம், வணக்கம் வணக்கம். என்று பல முறை பணிந்தார்.

**87. சிட்டன்இவ் வாறு கூறத் தேசிகர் மகிழ்ந்து நோக்கிக்**
**கிட்டவா எனஇருத்திக் கிருபையோடு அருளிச் செய்வார்**
**துட்டமாம் தடைகள் மூன்றும் தொடராமல் சொரூப ஞான**
**நிட்டனாய் இருக்கின் ஈதே நீசெயும் உதவி யாமே.**

சத்குரு மகிழ்ந்து சீடனை அழைத்து ஜீவ பிரம்ம ஐக்கிய ஞானத்தை தடுக்க வல்ல மூன்று தடைகள் உன்னைப் பற்றாமல் சொரூப ஞான நிட்டையில் இருந்தால் அதுவே நீ எனக்கு செய்யும் உதவியாகும் என்றார்.

**88. நீநான் என்று இரண்டுஇ லாமல் நிறைந்தபூ ரணமாய் எங்கும்**
**நான் ஆகத் தெளிந்த ஞானம் நழுவுமோ குருவே என்றான்**
**தான் ஆகும் பிரம ரூபம் சற்குரு நூலால் தோன்றும்**
**ஆனாலும் தடைகள் உண்டேல் அனுபவம் உறைத்தி டாதே.**

குருவே தத் பத லட்சியார்த்தமான பிரம்மம், துவம்பத லட்சியார்த்தமான கூடத்தன் என்ற இரண்டு கற்பனை இல்லாமல் எங்கும் நிறைந்த பரிபூரணமாய் எவ்விடத்தும் அறிவே வடிவமாக யான் உள்ளேன். என்று தெளிந்து அறிந்த ஞானம் மறைந்து போகுமா ? என்று சீடன் வினவினார். பிரம்ம அனுபவ மானது குருவின் போதனைகள் மற்றும் வேதாந்த சாத்திர விசாரத்தாலும் தோன்றும். அவ்வாறு தோன்றியதற்கு தடைகள் உண்டானால் அந்த அனுபவம் நிலைத்து இருக்காது.

**89. தடைஎவை எனில்அஞ் ஞான சந்தேக விபரீ தங்கள்**
**படர்செயும் இந்த மூன்றும் பலசன்மப் பழக்கத் தாலே**
**உடன்உடன் வரும்வந் தக்கால் உயர்ஞானம் கெடும்இ வற்றைத்**
**திடமுடன் கெடுப்பாய் கேட்டல் சிந்தித்தல் தெளித லாலே.**

அஞ்ஞானம், சந்தேகம், விபரீதம் ஆகிய மூன்று தடைகளும் துன்பத்தை தரும் இயல்பு கொண்டவை. இந்த தடைகள் பல பிறவிகளில் தொடர்ந்து வந்த பழக்கத்தால் ஏற்படுபவை.

இந்த தடைகளால் ஜீவ, பிரம்ம ஐக்கிய ஞானம் நிலைத்து இருக்காமல் அழிந்து போகும் சிரவணத்தால் அஞ்ஞானத்தையும், மனனத்தினால் சந்தேகத்தையும், நிதித்தியா சனத்தினால் விபரீதத்தையும் உறுதியான முயற்சியினால் நீக்கி விடுவாயாக !

**90. அக்கினி கட்டுப் பட்டால் அற்பமும் சுடமாட் டாது**
**மக்கின ஞானத் தாலே வந்தபந் தமும்வே வாது**
**சிக்கெனப் பழகிக் கேட்டல் சிந்தித்தல் தெளித லாலே**
**விக்கின மடம்சந் தேகம் விபரீதம் போக்கு வாயே.**

மந்திரத்தால் கட்டப்பட்ட தீ சுடாதது போல் அஞ்ஞான சந்தேக விபரீதங்களால் தடைபட்ட தத்துவ ஞானத்தால் நான் கர்த்தா போக்தா என்ற பந்தங்கள் பல பிறவிகளில் தொடர்ந்து வந்தாலும் அழிந்து போகாது. நிரந்தர அன்பால் அப்பியாசம் செய்து சிரவண மனன நித்தியாசனங்களாலே ஞானத்திற்கு இடையூறான அஞ்ஞான சந்தேக விபரீதங்களை களைவாயாக.

**91. பிரமபா வனையை மூடிப் பேதம் காட்டுவது அஞ் ஞானம்**
**குரவன்வாக் கியம்நம் பாமல் குழம்புவ தாம்சந் தேகம்**
**திரம்அறு சகம்மெய் என்றும் தேகம்நான் என்றும் உள்ளே**
**விரவிய மோகந் தானே விபரீதம் என்பர் மேலோர்.**

அகம், பிரம்மம் என்கிற உணர்வை மறைத்து நான் பிரமம் அல்ல அழியும் இந்த உடம்பே நான் என்று எண்ணியதே அஞ்ஞானம் ஆகும். நீயே பிரமம் என்று குரு உபதேசத்தை நம்பாமல் உலகமே நிச்சயமானது என நம்புவது சந்தேகமாம். நிலையில்லாத உலகத்தை நிலையானது என்றும் அழிக்ககூடிய உடம்பை ஆன்மா என்று கருதுவதே விபரீதம் என்பதை அறிவாயாக.

92. தத்துவ அனுபோ கம்தான் சாதித்தல் கேட்டல் என்பார்
ஒத்துள பொருள்ஊ கத்தால் உசாவல்சிந் தித்தல் என்பார்
சித்தம்ஏ காந்தம் ஆன தெரிசனம் தெளிதல் என்பார்
நித்தம்இப் படிசெய் தக்கால் நிர்வாணம் பெறுவாய் நீயே.

'அறிவே நான்' என்று நினைத்துக் கொண்டிருப்பவனே குருவின் போதனையைச் சிரவணம் செய்தவன் ஆகிறான் அறிவுக்கும், சமாதி நிலையில் ஜொலித்துக் கொண்டிருக்கும் ஆத்ம ஜோதிக்கும் உள்ள ஐக்கியத்தை யுக்தியினால் ஆராய்ந்து சிந்தித்தல் மனனமாம் அனுதினமும் சிந்திப்பதால் புத்தியில் உள்ள மலம் நீங்கி ஆத்ம தரிசனமான பிரம்மானுபவம் கிடைக்கிறது பிறவித் துன்பம் நீங்குகிறது என்பதை நீ உணர்வாயாக.

93. எத்தனை நாள்ஞா தாவும் ஞானமும் இருக்கும் உன்பால்
அத்தனை நாளும் வேண்டும் அப்பால்ஓர் செயலும் வேண்டா
நித்தமும் வெளிபோல் பற்றா ஞேயமாத் திரமாய்ச் சீவன்
முத்தர்ஆ னவர்வி தேக முத்திபெற்று இருப்பார் என்றும்.

கேட்டல், சிந்தித்தல், தெளிதல் என்ற மூன்றையும் எவ்வளவு காலம் வரை நான் பின்பற்ற வேண்டும் ? உன் உள்ளத்தில் தன்னுடையது அல்லாத பொய்ப்பொருட்கள், எல்லாம் தன்னுடையது என்று நினைக்கும் பற்று நீங்கும் வரை பின்பற்ற வேண்டும் காண்பான், காட்சி என்ற உணர்வு எவ்வளவு காலம் நீடிக்குமோ அதுவரை இந்த மூன்று பயிற்சிக்கும் தேவை. அதன்பின் இவைகள் தேவை இல்லை ஆகாயம் போல் ஒன்றோடும் பற்றாது ஜீவ பாவனை முதலியன இறந்து சின் மாத்திரமாய் இருந்தலே ஜீவன் முக்தியாகும். ஜீவன் முத்தியை அடைந்தவர்கள் பற்று அற்று விதேக கைவல்யத்தை அடைந்து இருப்பார்கள்.

94. ஞானம்ஆர் சீவன் முத்தர் நால்வகை ஆவர் கேளாய்
வான்நிகர் பிரம வித்து வரன்வரி யான்வ ரிட்டன்

ஆனவர் நாமம் ஆகும் அவர்களில் பிரம வித்தின்
தானமும் மற்றை மூவர் தாரதம் மியமும் சொல்வேன்.

ஆத்ம ஞானம் பெற்ற ஜீவன் முக்தர்கள் நான்கு வகைப்படுவர். ஆகாயத்தைப் போல் எக் கருமத்தையும் பற்றதவர் **பிரம்மவித்து**. இரண்டாவது பக்குவம் வந்த ஞானி வரன் என்றும், மூன்றாவது பக்குவம் பெற்றவர், **வரியான்** என்றும் நான்காவது பக்குவம் பெற்றவர் **வரிட்டன்** என்று பெயர். பிரம்மவித்துவின் நிலை மற்ற மூவரின் செயல்களையும் கூறுகிறேன் கேட்பாயாக என்றார் குரு.

95. தீரராய்ப் பிரம வித்தாய்த் தெளிந்தவர் தெளியும் முன்னம்
வாரமாய் இருந்த தங்கள் வருணம்ஆச் சிரமம் சொன்ன
பாரகா ரியம்ஆ னாலும் பலர்க்குஉப காரம் ஆக
நேரதாச் செய்வர் தீர்ந்த நிலைவிடார் சீவன் முத்தர்

மன உறுதியுடன் சிரவணாதிகளால் தெளிந்தவர்கள் ஜீவன் முத்தர் ஆவர் மன தெளிவு அடைவதற்கு தத்தமது வருண ஆசிரம தர்மத்திற்கு உரிய நற் கருமங்களை சிரமமாக இருந்த போதும் பலபேர்களுக்கு உபகாரமாக நன்மையே செய்பவர். அப்படி செய்தாலும் ஜீவித்து இருக்கும் போதே ஜீவன் முத்தராய் உள்ள இவர் தான் பிரம்மமே என்னும் அனுபவத்தை விட்டு நீங்காது இருப்பவர்.

96. காமம்ஆ திகள்வந் தாலும் கணத்தில்போம் மனத்தில் பற்றார்
தாமரை இலைத்தண் ணீர்போல் சகத்தொடும் கவடி வாழ்வார்.
பாமரர் எனக்காண் பிப்பார் பண்டிதத் திறமை காட்டார்
ஊமரும் ஆவார் உள்ளத்து உவகையாம் சீவன் முத்தர்.

பிரம்ம வித்து ஆனவர் மனதில் காமக் குரோதாதிகள் முன் அனுபவத்தால் வந்தாலும் உடனே நீங்கி விடும். அவற்றின் வாசனைகளும் மனதில் பற்றாது நீரில் தாமரை இருந்தாலும்

இலையிலும், பூவிலும் நீர் பற்றாதது போல் உலக விவகாரத்தோடு கூடியிருந்தாலும் அதில் பற்று இன்றி வாழ்வார்கள். முடரைப் போல் தம்மை பிறர்க்கு காட்டிக் கொண்டு இருப்பார்கள் தமக்குள்ள பிரம்ம ஞானத்தினை பிறர்க்கு காட்டாது விடினும் விடுவார் மனதில் தடையற்ற ஆனந்தத்தை அனுபவித்துக்கொண்டே மௌனமாக இருப்பார்கள்.

**97. பேதகர் மத்தால் வந்த பிராரத்தம் நானா வாகும்**
**ஆதலால் விவகா ரங்கள் அவர்அவர்க்கு ஆவ ஆகும்**
**மாதவம் செயினும் செய்வார் வாணிபம் செயினும் செய்வார்**
**பூதலம் புரப்பார் ஐயம்புகுந்து உண்பார் சீவன் முத்தர்.**

ஒவ்வொரு ஜீவனும் முன் ஜென்மங்களில் நான்குவகை கர்மத்தை (சஞ்சித கன்மம்) செய்த ஜீவர்கள். ஒரு ஜீவன் ஞானியான பின்னரும் பிராரத்த கர்மத்தை அனுபவித்து முடித்தப் பிறகுதான் அந்த ஜீவன் மோட்சத்தை அடைய முடியும். ஜீவன் பிரார்த்த கர்மத்தின்படி நிகழ்காலத்தில் செய்ய கூடிய காரியங்களும் வேறுபடும். ஒரு ஜீவன் மகா தவம் செய்யும், ஒரு ஜீவன் வாணிபம் செய்யும். ஒரு ஜீவன் பூமியைப் பயிர் செய்து உண்ணும் ஒரு ஜீவன் பிச்சை எடுத்து உண்ணுதலைச் செய்யும் ஜீவன் முத்தர்கள் பலவிதமான காரியங்களைச் செய்தாலும் ஞானமும் அதன் பலன் ஆகிய முக்தியும் அந்த ஜீவன்களுக்கு சமம் ஆகும்.

**98. சென்றது கருதார் நாளைச் சேர்வது நினையார் கண்முன்**
**நின்றது புசிப்பார் வெய்யில் நிலவாய்விண் விழுது வீழ்ந்து**
**பொன்றின சவம்வாழ்ந் தாலும் புதுமையா ஒன்றும் பாரார்**
**நன்றுதீது என்னார் சாட்சி நடுவான சீவன் முத்தர்.**

இந்த ஜீவன் முக்தர்கள், முன் நிகழ்ந்தவற்றை நினைத்து வருத்தப்படமாட்டார்கள். எதிர் காலத்தில் நடக்க விருப்பதை எண்ணி மகிழ்வு அடைய மாட்டார்கள். நிகழ் காலத்தில் பிரார்த்த கன்மத்தால் கிடைக்க கூடிய உணவு, உடைகளை, அனுபவிப்பார். வெய்யில் நிலவாக குளிர்ந்து விமுவதாக இறங்கினாலும். இறந்த உடல் உயிர் பெற்று எழுந்தாலும்.

எந்த அதிசயம் நிகழ்ந்தாலும் புதுமையாக ஒன்றையும் கருதமாட்டார். இது நன்மை இது தீமை என்றும் கூறமாட்டார்கள். இவ்வாறு இருத்தலே சாட்சி மாத்திரமாய் நடுநிலையில் இருக்கும் ஜீவன் முத்தரது செயலாகும்.

**99. பின்னைமூ வரில்இ ரண்டு பேர்களும் சமாதி யோகம்**
**தன்னைஉற்று இருப்பார் தேக சஞ்சார நிமித்தம் தானாய்**
**உன்னுவோன் வரன்வேற் றோரால் உணர்பவன் வரியான் ஆகும்**
**அந்நியர் தம்மால் தன்னால் அறியாதோன் வரிட்டன் ஆகும்.**

வரன், வரியான், வரிட்டன் என்ற மூவருல் வரன் தனிமையில் நிட்டைகூடி இருப்பவர் பசி உணர்வு வந்த போது தாமாகவே நிட்டை கலைந்து உணவு கொள்பவர். வரியன் தனித்த நிட்டையில் இருப்பார். மற்றவர் முயற்சியால் தவ நிலை கலைந்து உணவு உண்பவர். வரிட்டன் தனித்த சமாதி நிட்டயில் இருக்கும் இவர் தானாகவும் உண்ணமாட்டார் பிறர் எழுப்பியும் உண்ணமாட்டார், சமாதி நிலையில் மாறாது இருப்பவர்.

**100. அரிதுஆகும் இவர்கள் இவ்வாறு அநேகர் ஆனாலும் முத்தி**
**சரியாகும் பாடு பட்ட சமாதிக்குப் பலன்ஏது என்றால்**
**வெரிதான திருஷ்ட துக்கம் பிரமவித்து அனுப விப்பன்**
**வரியானும் வரனும் மற்றை வரிட்டனும் சுகமாய் வாழ்வார்.**

ஜீவன் முத்தர்கள் பிரார்த்த கன்மத்தால் பலவிதமாக இருந்தாலும் முத்தி பேற்றில் ஏற்றத் தாழ்வு இன்றி சமமாக இருப்பார்கள். இவர்கள் கடினப்பட்டு பெற்ற சமாதிக்கு பலன் என்னவென்றால் பிரம்ம வித்தானவன் உலக உபகாரத்தில் நாட்டம் உடையவராக இருப்பதால் அதனால் கிட்டும் துன்பங்களை அனுபவிப்பார் மற்ற மூவரும் உலக விவகாரம் இல்லாததால் பரிபூரண முத்தி சுகத்தினை உடையவராக இருப்பார்கள்.

**101. பிரம ஞானிகளும் கர்மப் பேதையர் போலே வாழ்ந்தால்**
**திரம்உறும் அஞ்ஞா னம்போய்ச் செனியாத வழி ஏது என்றால்**

பரவும்ஆ காசம் ஒன்றில் பற்றாது மற்றை நாலும்
விரவின தோடும் கூடும் விதம்இரு வோரும் ஆவார்.

ஞானிகளும் அஞ்ஞானிகள் போல் உண்பதிலும், வருத்தப்படுவதிலும் குடும்பத்தோடு சேர்ந்து இருப்பதிலும் ஒன்றுபோல் இருக்கிறார்கள் என்றால் அஞ்ஞானம் நீங்கி ஞானிகள் மட்டும் எப்படி மோட்சத்தை அடைவார்கள் ? ஆகாயம் எப்படி மற்ற நான்கு பூதங்களோடு கலந்து கூடியிருந்தாலும் ஒரு பூதத்திலும் பற்று வைப்பது இல்லை அதுபோல் ஜீவன் முத்த ஞானி குடும்பத்தோடு கூடி இருந்தாலும் அவரைக் குடும்பமும், அஞ்ஞானமும் பற்றுவது இல்லை. எனவே ஞானிக்கு மோட்சம் கிடைப்பது நிச்சயமாம்.

102. சீவன்முத் தரைச் சேவித்தோர் சிவன்அயன் நெடுமால் ஆன
மூவரும் மகிழ நோன்பு முழுவதும் செய்து சன்ம
பாவனம் ஆனார் என்று பழமறை முழங்கும் இப்பால்
மேவரும் சீவன் முத்தர் விதேகமுத் தியும்நீ கேளாய்.

ஜீவன் முத்தரை வணங்கியவர்கள் சிவன் பிரம்மா, திருமால் ஆகிய மூவரும் மகிழ தவங்கள் அனைத்தையும் குறைவு இல்லாமல் செய்து பிறவியில் தூய்மை அடைந்தவர்கள் என்று வேதங்கள் கூறுகின்றன. ஜீவன் முத்தர்கள் அடையும் விதேக முத்தி பற்றி கூறுகிறேன் கேட்பாயாக என்றார் குரு.

103. பஞ்சினை ஊழித் தீப்போல் பலசன்ம விவித வித்தாம்
சஞ்சிதம் எல்லாம் ஞானத் தழல்சுட்டு வெண்ணீறு ஆக்கும்
கிஞ்சித் ஆகாமி யம்தான் கிட்டாமல் விட்டுப் போகும்
விஞ்சின பிராரத் தத்தின் வினை அனு பவித்துத் தீரும்.

தீயானது பஞ்சினை எளிதில் எரிப்பதுபோல் அளவற்ற பிறவிகளுக்கு ஆதாரமாக விளங்கும் சஞ்சித விகைளை ஞான தீ மிக எளிதாக எரித்து அழிக்கும் கர்த்தாத் தன்மை

இல்லாததால் ஆகாமிய வினை சிறிதும் பற்றாமல் நீங்கும் மீதமுள்ள பிரார்த்த வினை அனுபவித்தலால் நீங்கும்.

104. பொறுமையால் பிராரத் தத்தைப் புசிக்கும்நாள் செய்யும் கர்மம்
மறுமையில் தொடர்ந்தி டாமல் மாண்டுபோம் வழிஏது என்றால்
சிறியவர் இகழ்ந்து ஞானி செய்தபா வத்தைக் கொள்வார்
அறிவுளோர் அறிந்து பூசித்து அறம்எலாம் கைக்கொள்வாரே.

ஜீவன் முத்தர்கள் பொறுமையோடு பிரார்த்த கன்மத்தின் பலனை அனுபவிக்கும் போது நிகழ் காலத்தில் செய்கின்ற கன்மத்தின் பலன் அவர்களுக்கு மறு பிறவிகளுக்கு தொடராமல் அழிவதற்கு காரணம் யாது ? என்றால் ஞானிகளை நிந்தித்து அவர்கள் செய்த தீவினைகளை அறிவில்லாதவர்கள் எற்றுக்கொள்கின்றனர். அறிவுடையவர்கள் ஞானிகள் பிரம்ம சொரூபம் உடையவர்கள் என்று தெரிந்து அவர்களை வழிபாடு செய்து அவர்கள் செய்த நல்வினைகளை பெற்றுக்கொள்வர்.

105. அரியமெய்ஞ் ஞானத் தீயால் அவித்தையாம் உடல்நீறு ஆகும்
பெரியதூ லமும்கா லத்தால் பிணமாகி விழும்அந் நேரம்
உரியசூக் குமசரீரம் உலைஇரும்பு உண்ட நீர்போல்
துரியமாய் விபுவாய் நின்ற சொரூபத்தில் இறந்து போமே.

தத்துவ ஞானம் என்ற அக்னியால் அவத்தை என்ற காரண சரீரமும், பருத்த தூல சரீரமும் பிராரத்த கன்ம அனுபவ முடிவில் சவமாகின்றது. தீயில் சுட்ட இரும்பு கம்பியில் நீர் மறைவதுபோல் சூட்சமசரீரமும் தூரியமாயும் வியாபகமாயும் உள்ள பிரம்மத்தில் லயமாகின்றது. மூன்றுவிதமான சரீரங்களும் அழிவதால் ஜீவன் முத்தனுக்கு மீண்டும் பிறவி ஏற்படுவது இல்லை.

106. கடன்எனும் உபாதி போனால் ககனம்ஒன்று ஆனால் போல
உடல்எனும் உபாதி போன உத்தரம் சீவன் முத்தர்
அடிமுடி நடுவும் இன்றி அகம்புறம் இன்றி நின்ற
படிதிகழ் விதேக முத்திப் பதம் அடைந்து இருப்பர் என்றும்

குடம் என்ற உபாதி நீங்கினால் குடத்தில் உள்ள ஆகாயம். மகா ஆகாயத்தோடு ஒன்றானதுபோல் மூன்று சரீர உபாதி நீங்கிய பின்னர் ஜீவன் முத்தர் பிரம்மாய் இருக்கின்றதால் ஆதியும், அந்தமும், மத்தியும், இல்லாமல், உள்ளும், புறமும் இல்லாமல் எப்போதும் தான் இருந்த படியே விளங்கும் விதேக முத்திப் பதத்தை அடைந்து இருப்பார்கள்.

107. சொல்லிய மகனே எங்கும் சூழ்வெளி இருக்க மண்ணைக்
கெல்லிய பின்பு தோன்றும் கிணற்றின்ஆ காசம் போலே
ஒல்லையாம் பிரம நூலால் உற்றது போலே தோன்றும்
எல்லையில் நாம்எப் போதும் ஏகம்என்று இருந்து வாழ்வாய்.

ஆத்ம அனுபவத்தை அறிந்த சீடனே! எங்கும் வியாபித்துள்ள ஆகாசம் தான் இருந்தபடியே உள்ளது போல், பூமி மண்ணைத் தோண்டிய பின்னர் உருவான கிணற்றில் தோன்றும் ஆகாசத்தைப் போல், சுபாவ சித்தமாய் உள்ள பிரம்மம், சாத்திர விசாரத்தாலும் குருவின் போதனையாலும் கிடைக்கப்பெற்றதைப் போல் தோன்றும். அப்படி தோன்றினாலும் அது உண்மை இல்லை. அளவு கடந்த வியாபகமான பிரம்மமாகிய நாம் எப்போதும் ஒன்று என்று மாறாமல் இருந்து வாழ்வாய் என்றார்.

108. கானல்நீர் கிளிஞ்சில் வெள்ளி கந்தர்ப்ப நகர்க ளாஉவர்
வானமை கயிற்றில் பாம்பு மலடிசேய் முயலின் கோடு
பீனமாம் தறிபு மானில் பிரபஞ்சம் எல்லாம் பொய்யே
ஞானமெய் மகனே உன்னை நம்ஆணை மறந்தி டாதே.

கானலில் தோன்றிய நீர், கிளிஞ்சலில் தோன்றிய வெள்ளி, கந்தர்வர்கள் நகரம் போல்

கனவில் கண்டஊரும், வானத்தில் தோன்றும் நீல நிறமும், கயிற்றில் கண்ட பாம்பின் பொய் தோற்றமும், மலடி பெற்ற மகன், முயலின் கொம்பு, கட்டையில் தோன்றிய கள்ளவன். போல காணும் இந்த உலகம் எல்லாம் பொய்யே என்று உணர்வாயாக இந்த பிரம்மமே சத்தியமானது. நிச்சயமானது இந்த தன்மையான உன்னை என்மேல் ஆணையாக மறந்திடாதே சீடனே ! என்று குரு உரைத்தார்.

## சந்தேகம் தெளிதற் படலம் :

1. நரர்குழி பறித்து மெள்ள நாட்டிய நெடிய கம்பம்
   உரம்உறக் குத்திக் குத்தி உறைப்பிக்கும் உபாயம் போலே
   பரமசிற் சொரூபம் தன்னில் பற்றிய மனோவி ருத்தி
   திரநிலை பெறச்சந் தேகம் தெளிதலை மொழிகின் றேனே.

மனிதர்கள் குழி தோண்டி அதில் நட்ட கம்பு நிலையாக நிற்க மண்ணைக் கொட்டி இடித்து பலப்படுத்துவது போல் 'நான் பிரம்மவடிவம்' என்ற மனோ விருத்தி அந்தக் கரணத்தில் சலனமற்று நிலைத்து இருக்கும் பொருட்டு சந்தேகம் தெளிவிக்கின்ற பகுதியை சீடனே இப்போது நான் உபதேசிக்கிறேன்.

2. நற்கருத்து உடையோன் ஆகி ஞானவான் ஆகி நின்றோன்
   மர்க்கட நியாயம் போலே மகாபூத விகாரம் தொட்டு
   நிர்க்குண விதேக முத்தி நிலைபரி யந்தம் சொன்ன
   சற்குரு வினைவி டாமல் சந்ததம் அனுச ரித்தான்.

பேரானந்தமான சிந்தையை உடையவனாய் நான் பிரம்மம் என்னும் அறிவு உடையவனாய் இருந்த சீடன் மார்க்கட நியாயத்தைப் போல பஞ்சபூத காரியமான தூலதேக முதல் திரிகுண ரகிதமான விதேக கைவல்யம் மட்டும் உபதேசித்து அருளிய குருவை விட்டு நீங்காமல் சதா காலமும் தொடர்ந்து இருந்தார்.

**3. சந்ததம் புருடன் தன்னைச் சாயைபோல் விடாமல் அன்பாம்**
**மைந்தனை நோக்கிச் சாட்சி மாத்திர மாய்நின் றாயோ**
**சிந்தையில் ஐயம் எல்லாம் தீர்ந்தவோ தெளிவின் உள்ளே**
**அந்தரம் கலந்தது உண்டோ அனுபவம் உரைசெய் வாயே.**

புருடனை விட்டு விலகாத நிழல் போல எப்பொழுதும் குருவிடம் அன்புடன் இருக்கும் சீடனை நோக்கி உலக விஷயங்களில் நம் மனம் நம்முடைய முயற்சி இல்லாமலே பற்றி நிற்பது போல் மூன்று அவத்தைகளையும் அறிகிற சாட்சியை நம் மனம் பற்றி நிற்கும். பலகாலமாய் நம் மனதில் ஏற்பட்ட அசுப வாசனைகளாகிய ஐயம்நீங்கி மனம் ஆன்மாவில் லயம் ஆகி தெளிவு சித்திக்கும் அந்தத் தெளிவின் அனுபவத்தை கூறு என்று கேட்டார்.

**4. எனஉரைத்து அருளும் ஆசான் இருபதம் வணங்கி எந்தாய்**
**சநநவன் காட்டில் மோகத் தமத்துஎழு பேதப் பேய்கள்**
**உனதுஅருள் உதய வெற்பில் உபதேச அருக்கன் தோன்றி**
**மனவிழி தெரிய ஞான வான்கதிர் பரந்தால் உண்டோ.**

அஞ்ஞான இருளின் 5 வகை பேதத்தை உணர்த்தும் பேய்கள் உங்களின் பிரம்ம உபதேசத்தால் ஞானம் கிட்டி அஞ்ஞானம் அகன்றது.

**5. மந்திர மூர்த்தி தன்னால் மாற்றிய பேய்போ னாலும்**
**எந்திரம் எழுதிக் கட்டி இனிவரா வகைசெய் வார்போல்**
**முந்திஉன் உபதே சத்தால் மோகம்போ னாலும் ஐயா**
**புந்திநின்று உரைக்க இன்னம் புகலும்விண் ணப்பம் உண்டே.**

மந்திரத்தால் உடலில் இருந்து பேய் போனபிறகும் மந்திரம் எழுதிய தகட்டினை உடலில் கட்டி மீண்டும் பேய் திரும்பாதபடி செய்வது போல் தங்களின் உபதேசத்தால் அஞ்ஞானம் நீங்கினாலும் என் சிந்தை ஆத்ம அனுபவத்தில் திளைக்க செய்ய வேண்டினார்.

6. ஆகமப் பிமா ணத்தால் அறிஎன்றும் வாக்குக்கு எட்டாது
ஏகமாம் பிரமம் என்றும் இதயத்தால் உணர்வாய் என்றும்
சோகம்ஆம் மனத்திற்கு எட்டாச் சுயஞ்சோதி என்றும் சொன்னீர்
மோகம்ஆம் இரண்டு சங்கை முளைத்தன பறித்தி டீரே.

சுருதி பிரமாணத்தால் நீயே பிரமம் என்று அறிந்து கொள். பிரம்மம் சுருதி வாக்கியத்திற்கும் எட்டாதது. உன்னை உன் மனத்தால் உணர்வாயாக. துன்பம் கொண்ட மனத்தால் அறிய இயலாத சுயம்பிரகாச வடிவம் என்று உபதேசித்தீர்கள் இதில் இரண்டு சந்தேகம் தோன்றுகிறது.

7. மற்றைமுப் பிரமா ணத்தால் வத்துநின் னையம் கூடாதே
உற்றதுஓர் விடயம் பூதம் உபயம்அன்று ஆத லாலே
குற்றம்ஆம் குணவி சேடம் கூடாமல் இருக்கை யாலே
இற்றது வாக்குக்கு எட்டாது என்பதும் அறிவாய் நீயே.

பிரம்மம், பிரத்தியட்சம் உவமானம், அனுமானம், சுரோத்திராதி இந்திரியங்கள் இவைகளால் அறியப்பட இயலாதது. பஞ்ச பூதங்களில் ஒன்று அன்று பிரம்மம் சப்தப் பிரமாணமான சுருதிக்கு வஷயம் ஆகாதது என்று நீ அறிவாய்.

8. வாக்கியம் தனக்குஎட் டாது வத்துஎன்று உரைத்த வேதம்
வாக்கிய விருத்தி யால்அவ் வத்துவைக் காட்டிற்று அன்றோ
வாக்கியங் களிலே மானம் ஆவதுஏது என்றாய் ஆகில்
வாக்கியம் இரண்டும் மெய்யே மறைகள்பொய் யாது கேளாய்.

பிரம்மம், தத்துவமசி, தத்பதம், துவம் பதங்களின் பாகத்தியாக லட்சனையினால் பிரம்மம் அறியப்பட்டது. பிரம்மம் வாக்கிற்கு எட்டும் எட்டாது என்று இருவகை வாக்கியங்களுள் எது பிரமாணம் என்றால் இரண்டு வாக்கியங்களும் உண்மையே

9. தன்பதி அல்லாப் பேர்கள் தமைஅல்லன் அல்லன் என்றாள்
அன்பனைக் கேட்ட நேரம் அவள்வெட்கி மௌனம் ஆனாள்
என்பது போல நீக்கி இதுஅன்று இதுஅன்று எனச்சே டித்த
பின்பரப் பிரமம் தன்னைப் பேசாமல் காட்டும் வேதம்.

பிரம்மம் அல்லாதவை சடம். அவைகள் பிரம்மம் அன்று என்று ஒவ்வொன்றாக நீக்கி, பின் ஞான வடிவமாகிய எஞ்சிய பிரம்மத்தை வேதம் மௌனமாக உணர்த்தும்.

10. முந்திய சங்கை தீர மொழிந்ததை அறிந்து கொள்வாய்
பிந்திய சங்கை தீரப் பேசும்உத் தரம்நீ கேளாய்
இந்தியங் களுக்குஇ ராசன் இதயம்ஆம் அதின்எண் ணங்கள்
புந்தியும் மனமும் என்றே புறத்துஅகத்து உலாவி ஆடும்.

பிரம்மம் சுருதி வாக்கியத்திற்கு எட்டுமா ? எட்டாதா என்ற முதல் சந்தேகம் நீங்க நான் கூறியதை அறிந்து கொண்டாய் பிரம்மம் மனதிற்கு எட்டுமோ? எட்டாதோ? என்ற இரண்டாவது சந்தேகம் நீங்க நான் கூறுவதைக் கேட்பாய். அந்தக் கரணத்தின் விருத்திகள் புத்தியும் மனமும் தேகத்திற்கு அகத்திலும். புறத்திலும் சஞ்சரித்து உலாவும்.

11. உன்முகம் போல்கண் ணாடிக்கு உள்ஒரு முகம்கண் டாற்போல்
சின்மய வடிவின் சாயை சித்துப்போல் புத்தி தோன்றும்
நின்மனோ விருத்தி அந்த நிழல்வழி யாய்உ லாவும்
தன்மநன் மகனே இத்தைத் தான் அன்றோ ஞானம் என்பார்.

கண்ணாடியில் முகம் பிரதிபலிப்பது போல் புத்தி வடிவ அந்தக் கரணம் பிரிதி பிம்பிக்கும் மனோ விருத்தியான பகிர் முகமாய் விசயங்களில் சஞ்சரிக்கும் இந்த விருத்தியே ஞானம் ஆகும்.

12. உருக்கிய தராநீர் நாநா உருவங்கள் ஆனால் போல
விருத்திகள் கடபடாதி விடயமாய்ப் பரிண மிக்கும்
அருப்பல விடயம் எல்லாம் ஆபாசன் தோற்று விக்கும்
இருட்டினில் விளக்கும் கண்ணும் இல்லாமல் பொருள்கா ணாதே.

உருக்கிய செம்பு பல வடிவம் பெறுவது போல் அந்தக்கரண விருத்திகள் தமது விடயங்களுக்கு சமமான கடபாதிகள் வடிவம் ஆகின்றன. இருட்டில் ஒரு பொருளைக் காண தீபமும், கண்ணும் தேவை. அதுபோல உலக விஷயங்கைக் காண மனோ விருத்தியும் ஆபாசனும் தேவை.

13. எரிகின்ற விளக்கால் கண்ணால் இருட்பொருள் காணல் வேண்டும்
தெரிகின்ற பரிதி காணச் சென்றிடில் கண்ணே போதும்
விரிகின்ற சகத்தைக் காண விருத்தியும் பலமும் வேண்டும்
புரிகின்ற விருத்தி ஒன்றே போதும்மெய்ப் பொருள்காண் போர்க்கே.

இருளில் பொருளைக் காண கண் மற்றும் வெளிச்சம் தேவை. பிரகாசமான சூரியனைக்காண கண் மட்டுமே போதும் உலகத்தைக் காண மனோவிருத்தியும், ஆபாசனும் வேண்டும் ஆனால் அகண்ட சச்சிதானந்த பிரம்மத்தை அறிய மனோவிருத்தி மட்டும் போதும் ஆபாசன் தேவையில்லை.

14. விருத்தியும் பலமும் கூடும் விகாரமே மனம்என் பார்கள்
கருத்துஎழு விருத்தி வேண்டும் கணக்கினால் மனத்திற்கு எட்டும்
வருத்திய பலமாம் இந்த மனத்திற்குஎட் டாது கண்டாய்
அருத்தம்இப் படிஎன்று ஐயம் அகன்றுநீ தெளிந்தி டாயே.

மனம் என்பது அந்தக் கரண விருத்தியும் ஆபாசனும், சேர்ந்தது. அந்தக் கரணத்தில் உருவாகும் 'நான் பிரம்மம்' என்ற விருத்திக்கு பிரம்மம் விசயமாவதால் மனதிற்கு பிரம்மம் எட்டும் எனவும். ஆபாசனோடு கூடி துன்பத்தை தரும் மனதிற்கு பிரம்மம் எட்டாது எனவும் நீ அறிவாய். பிரம்மமானது மனதிற்கு எட்டாது. என்பதன் விளக்கம் இது என்று சந்தேகம் நீங்கி தெளிவாயாக.

15. வஞ்சகம்இல் பரமார்த்த குருவே சொன்ன
வழிகள் அறிந் தேன்இனிஓர் வசனம் கேளீர்
சஞ்சலம்அற்று அகண்டபூ ரணமாய்ச் சித்தம்
ததாகாரம் ஆவதுஅன்றோ சமாதி யோகம்
உஞ்சலைஒத்து அலைவதுதன் சுபாவம் ஆகி
ஒரு கணத்தில் பலஉலகாய் உதிக்கும் இந்த
நெஞ்சகம்வத் துவில் அசையா நிவாத தீப
நிலைஅடைவது எப்படியோ நீர்சொல் வீரே.

சித்தம் சஞ்சலம் இன்றி பிரம்ம வடிவாய் இருத்தல் சமாதி யோகம் ஆகும். சித்தம் ஊஞ்சலைப் போல் அலையாமல் சலனம் இன்றி நிலைபெறுவது எவ்வாறு ? என அருள வேண்டும்.

16. கருதுமனோ குணம்மூன்றுஆம் மூன்றில் ஒன்று
கதித்துஎழுந்தால் மற்றுஇரண்டும் கரந்து நிற்கும்
தருமம்மிகும் சத்துவம்மேல் ஆன போது
சன்மார்க்கம் ஆனதெய்வ சம்பத்து உண்டாம்
மருவுரசோ குணம்ஆகில் உலக தேக
வாதனையாம் சாத்திரவா தனையும் ஆகும்.
அருமகனே தமோகுணம்மேல் ஆன போதில்
அசுரசம்பத்து உண்டாகும் அறிந்து கொள்ளே.

சத்துவம், இரசோ, தாமசம் ஆகிய முக்குணங்களில் ஒன்று உயர்ந்து இருக்கும் போது மற்ற இரண்டு அடங்கியிருக்கும். சத்துவ குணம் உயர்ந்து இருந்தால் நல்ல காரியங்கள் செய்து தெய்வ அனுகூலம் கிட்டும். இரசோ குணம் உயரும் போது உலக தேகம் மற்றும் சாத்திர வாசனை சித்திக்கும். தமோ குணம் உயரும் போது துர்குணம் அசுர சம்பத்து கிட்டும் என்பதை உணர்வாயாக!

17. மனதுசத் துவசொரூபம் மற்றுஇ ரண்டும்
வந்துகலந் தனஅவ்வற்றை மாற்றி னால்போம்
தனதுநன்மார்க் கத்தைவிடாது இருந்த போது
தமோகுணமும் ரசோகுணமும் சமிக்கும் பின்னைக்
கனபரிணா மம்சலனம் போம்போ னக்கால்
களங்கம்அற்று நின்ற ஆ காசம் போலும்
நினதுஉளம் அப்படிஆம்அப் பிரமத்து ஒன்றாய்
நிருவிகற்ப சமாதியிலே நிற்கும் தானே.

சத்துவ குணம் மனதின் உண்மையான சுபாவம். அது உயர்ந்து இருந்தால் இரசோ மற்றும் தமோ குணங்கள் விலகி விடும். அதனால் சலனம் அழியும் மனது தெளிந்து விளங்கும் உன் சத்துவ மனம் பிரம்ம சொரூபத்தில் ஒன்றி நிருவிகற்ப சமாதியில் திளைக்கும்.

18. களங்கம்அற்ற கண்ணாடி தன்முன் வேறுஓர்
களங்கம்அற்ற கண்ணாடி காட்டும் போது
விளங்கியதன் மயம்ஆகி அபேதம் ஆகி
விகற்பம் இன்றி நிருவிகற்பம் ஆனாற் போல
அளந்து அறியப் படாவிபுவாய்ச் சத்தாய்ச் சித்துஆய்
ஆநந்தம் ஆம்பிரமத்து ஐக்கியம் ஆன
உளம்தெளிந்த படிஇருந்தால் உலகம் எங்கே
உலைவுஎங்கே என்றுசங்கை ஒழித்தி டாயே.

தூய கண்ணாடி முன் வேறு ஒரு தூய கண்ணாடியை வைத்தால் வேறுபாடு இல்லாமல் நிருவிகற்பமாக அதேபோல் தோன்றுவது போல் சத்துசித்து ஆனந்தமாய் விளங்கும் பிரம்மத்தில் ஒன்றிய மனமானது பிரம்மத்தில் ஐக்கியமாகி பிரம்ம மாகவே தெளிவிற்று இருத்தலால் உலக வடிவமாக பரிணாமித்தலும் , சலனங்களும் இல்லாது போகும் என்று சந்தேகம் தெளிவாயாக.

19. ஏகம்ஆய் மனம்இறந்தால் சீவன் முத்தர்
இருக்கும்மட்டும் பிராரத்தம் எதினால் உண்பார்
போகம்ஆ னதுபுசித்துத் தொலைப்பது அன்றோ.
புசிப்பதுஎன்றால் மனந்தானும் போனது அன்றே
சோகம்ஆம் மனம்இறந்தால் போகம் இல்லை
தோன்றும்எனில் முத்தர்என்று சொலக்கூ டாதே
மோகமாம் இதுதெளியக் குருவே நன்றா
மொழிந்து அருள்வாய் தெளிந்தது அன்றோ முத்தி தானே.

பிராரத்த வினை போகங்களை அனுபவிப்பதால் நீங்கும், போக அனுபவம் இல்லை என்றால் மனம் எவ்வாறு நசிக்கும் ? மனம் நசிக்காதவரைச் சிவன் முத்தர் என்று எவ்வாறு கூற இயலும் ? முத்தி என்பது மனம் தெளிவான நிலை ஆகும். மயக்கம் தரும் இச் சந்தேகம் அகலும்படி உபதேசித்து அருள வேண்டும்.

20. மனநாசம் சொருபம்என்றும் அருபம் என்றும்
வகுத்துஉரைப்பார் இருவகையா வரும்இ வற்றில்
வினவாத சீவன்முத்தர் இடத்தில் ஒன்றும்
விதேகமுத்தர் இடத்தில் ஒன்றும் மேவும் கண்டாய்
தனதுஆன சத்துவமாய் மனம்சே ஷித்துத்
தமசுரச சுகன் நசித்தல் சொருப நாசம்
அனகாசத் துவம்தானும் இலிங்க தேகம்
அடங்கும்போது அடங்குதலே அருப நாசம்.

மனநாசம் உருவநாசம், அருவநாசம் என இருவகையாகும். ஜீவன் முக்தரிடம் உருவ மனம் இரசோ, தமோ குணங்கள் நசித்துப்போய் சத்துவ குணமாய் இருப்பது மனதின் உருவநாசம் ஆகும். விதேக முக்தரின் சூட்சும சரீரம் காய்ந்த இரும்பில் பட்ட நீர் போல் நசித்து விடுவதால் மனதின் சத்துவ குண மனமும் அடங்குதல் மனதின் அருவநாசம் ஆகும்.

21. சுத்தமாம் சத்துவமே உண்மை ஆகும்
துகள்இருள்போ னால்மனம்என் சொல்லும் போம்போம்
வர்த்தமா னத்தில்வந்த உணவை உண்பார்
வருவதும்போ வதும்நினைத்து மகிழார் வாடார்
கர்த்தராம் அகந்தையைவிட்டு அகர்த்தர் ஆகிக்
கரணவிருத் திகள் அவத்தை காண்பார் ஆகி
முத்தராய் இருக்கலும்ஆம் புசிப்பும் கூடும்
முட்டுஇலைஎன்று அறிந்துசங்கை மோசிப் பாயே.

உருவ மனம் அழிந்த ஜீவன் முக்தர்கள் கிடைத்ததை உண்டு எதை நினைத்தும் வருத்தப் பட மாட்டார்கள் அந்த கரணத்தின் சாந்த, கோர, மூட விருத்திகள், சாக்கிர சொப்பன, சுழுத்தி முதலிய அவத்தைகளின் சாட்சியாக இருந்து காண்பர் அவர்கள் விதிப்பயனாக போகத்தை அனுபவிக்கும் போதே ஜீவன் முத்தராய் இருப்பர் என சந்தேகம் தீர்வாயாக.

22. விவகார வேளைஎலாம் சமாதி என்றால்
விகற்பம்அன்றோ மனம்அலைந்து விடாதோ விட்டால்
அவதானம் நழுவும் அன்றோ என்றாய் ஆகில்
அதற்குஒருதிட் டாந்தம்கேள் ஆசை கொண்டு
நவம்ஆகப் பரபுருடன் தன்னைக் கூடி
நயந்தசுகம் அனுபவித்த நாரி நெஞ்சம்
தவம்ஆக மனைத் தொழில்கள் செய்யும் போதும்
தழுவிஅனு பவித்தசுகம் தனைவி டாதே.

ஜீவன் முத்தன் உலக விவகாரங்களை செய்தாலும் மனம் பிரம்ம பாவனையை விடாமல் இருப்பர். ஜீவன் முத்தரது மனமும் விவகாரம் செய்யும் போது, ஜீவ, பிரம்ம ஐக்கிய பாவனையை மறவாது இருக்கும்.

23. தேகத்தன் அலன்ஆகி அகர்த்தன் ஆகிச்
சீவன்இன்றிப் பிரமம்ஆய்த் தெளிந்த முத்தன்
போகத்தை உண்பன் என்றால் கருத்தா ஆமே
பூரணம்ஆம் அகர்த்தனுக்குப் போகம் உண்டோ
சோகத்தை அறுத்து அருளும் குருவே இந்தத்
துகள் அறுக்க வேண்டும்என்று சொன்னாய் ஆகில்
மாகர்த்தன் மாபோகி மாத்தி யாதி
வகைமூன்றாய் அவர்இருக்கும் மகிமை கேளாய்.

தான் ஜீவன் என்ற பாவனை இல்லாது தன்னை பிரம்மம் என்று தெளிந்து உணர்ந்த ஜீவன் முத்தன் விஷய போகங்களை அனுபவிப்பான் என்றால் அவர் கர்த்தா ஆகிவிடுவார் அல்லவா? தானே பிரம்மமாக இருக்கும் அகர்த்தாவாகிய ஜீவன் முத்தனுக்குப் பிரார்த்த போகம் எப்படிச் சம்பவிக்கும் ? என்ற சந்தேகத்தை தீர்க்க வேண்டும். ஜீவன் முத்தர்கள் மாகர்த்தன் மாபோகி, மாத்தியாகி என மூவகைப்படுவார்கள்.

24. செய்கையும்செய் விக்கையும்அற்று இருக்கும் காந்தச்
சிலைமலைமுன் இரும்புகள்சேட் டிக்கு மாபோல்
செய்கையும்செய் விக்கையும்அற்று இருக்கும் என்முன்
செடமான உலகம்எலாம் சேட்டை செய்யும்
மெய்கலந்த இந்திரிய விகார ரூப
விவகார விருத்திக்கும் விருத்தி தானா
மெய்கலந்த சமாதிக்கும் சாட்சி யேநான்
வெயில்போல்என்று உறைத்தவனே விபுமா கர்த்தன்.

காந்தமலை முன்னே இரும்பு துண்டுகள் தானே சென்று சேர்வது போல் சத்து சித்தாய்

உள்ள எமக்கு முன்னே சடமான பிரபஞ்சம் யாவும் தத்தம் விவகாரங்களை செய்கின்றன. உலக காரியங்களுக்கு சூரியன் சாட்சியாக உள்ளது போல சரீரத்தோடு கூடிய இந்திரியங்கள் அடங்கி மனம் தன் மயமாகி பிரம்மத்திலிடத்துப் பொருந்திய சமாதிக்கும் நான் சாட்சியாக உள்ளேன் என்ற நிச்சயம் உள்ளவனே மாகர்த்தன் ஆவான்.

25. அறுசுவையின் குணம்குற்றம் அசுத்தம் சுத்தம்
அபத்தியம்பத் தியம்எனஊன் ஆய்ந்தி டாமல்
பொறுமையுடன் கிட்டினதைக் காட்டுத் தீப்போல்
போகங்கள் புசிப்பவன்மா போகி ஆகும்
சிறிதுவெரி துகள்தனதுஅந் நியங்கள் நன்மை
தீமைகள்சே ரினும்படிகச் செயல்போல் சித்தம்
வெறிதுஇருக்கும் அவனேமாத் தியாகி ஆவன்
விரதம்இம்மூன் றும்உடையவரே வீடு உளோரே.

அறுசுவை உணவை பகுத்து பாராமல் வினைப் பயனால் கிடைத்ததைப் பொறுமையுடன் அனுபவிப்பவன் மாபோகியாவான். எளிய சிறிய பொருள் அறிய பெரிய பொருள் தன்னுடையது, அன்னியருடையது நல்லது, தீயது என்றவற்றால் சிறிதும் மாறுபடாமல் படிகம் போல் பற்று அற்ற சித்தம் உடையவனே மாத்தியாகி ஆவான். இம் மூன்று விரதம் கொண்டவர்களே ஜீவன் முத்தராம்.

26. மெய்யும் கொண்டுபி ராரத் தம்தரு விதிவழி நின்றிடவும்
உய்யும் கர்மிக ளுக்குஅனு குணமா உறுதொழில் செய்திடவும்
செய்யும் செய்கைமு டிந்தவன் என்றுஉரை செப்புவது எப்படியோ
நையும் துன்பம் அகற்றிய குருவே நலமா அருள்வீரே.

உடலோடு கூடி நின்று முன்வினைப் பயனாகிய பிராரத்த கர்மாவை செய்து கொண்டு மோட்சம் அடைய விரும்பும் கர்ம காண்டிகளுக்கு உபதேசம் செய்யும் ஜீவன் முக்தனை 'செய்ய வேண்டிய அனைத்தும் செய்து முடித்தவன்' என எவ்வாறு கூற இயலும் ? சந்தேகம் தெளிவிக்க வேண்டும்.

27. ஆடவர் செய்தொழில் மூவகை ஆகும் அவித்தைவ சத்துஉ றுநாள்

ஏடணை மமதைஅ கந்தைஉ ளார்க்கே இகபர விவகாரம்

வீடுஅனு குவம்எனும் இச்சைஉ ளார்க்கே வித்தைப டிப்பதுஎலாம்

பாடல்மி கும்தொழி லால்பலன் உண்டோ பரபூ ரணம்ஆனால்.

உலகோர் செய்யும் தொழில் உழவாதி யக்ஞாதி, சிரவணாதி என்ற மூன்றாகும். போகத்தில் இச்சை, தேகத்தில் நான் என்று நினைப்பவர்களுக்கே உழவாதி விவகாரமாம். சொர்கத்தின் மீது இச்சை கொண்டவர்களுக்கே யக்ஞாதி விவகாரமாமம். மோட்ச இச்சை உடையவர்களுக்கே சிரவண மனனாதிகள் செய்யத்தக்கனவாம். தத்தவ ஞானத்தால் பிரம்ம வடிவாய் பரிபூரணமாக உள்ளவர்களுக்கு உழவாதி, யக்ஞாதியால் ஒரு பயனும் இல்லை. எனவே ஜீவன் முத்தன் செய்ய வேண்டியன யாவும் செய்து முடித்தவன் ஆவான்.

28. குரவர்சி காமணி யேகே ளீர்நீர் கூறின வழிஒக்கும்

பரமுடன் இகமும் இழந்தவர் அன்றோ பழகுவர் மெய்ஞ்ஞானம்.

விரவுமு யற்சியின் மீண்டவர் அதைஇனி வேண்டுவ ரோவேண்டார்

சிரவண மனனா திகள்வேண் டாவோ சித்தம்உ றைத்திடவே.

ஞானிகளுக்கு உழவாதி, யக்ஞாதி சிரவணாதியால் பயன் இல்லை இகலோக பரலோக ஆசை நீங்கியவர்கள் தான் ஞானம் பழக இயலும். ஞான நெறியில் சென்றவர்கள் மீண்டும் பழைய செயல்களை செய்ய மாட்டார்கள். சித்தம் தன் சொரூபமான பிரம்மத்தில் திடம் பெரும் பொருட்டு சிரவண, மனன சாதனங்களைச் செய்ய வேண்டியது இல்லையா ?

29. கிளர்மக னேகேள் தத்துவம் அறியார் கேட்டல் செயக்கடனே

தளர்வுஅறு சிந்தித் தலின்முயல் வார்சிலர் சந்தே கங்கள்உளார்

தெளிதலின் நிற்பார் விபரீ தப்பேய் தீரா வாதனையோர்

வெளிஉரு வாய்,அறி வாய்நிறை வாயினர் வேண்டுவது ஒன்றுஉண்டோ.

தனது உண்மை சொருபத்தை உணராதவர்கள் சிரவணம் செய்ய வேண்டும். சந்தேகம்

உடையோர் மனனம் செய்ய வேண்டும். விபரீத சிந்தை உடையோர் நிதித்தியாசனம் என்ற தெளிதலில் முயல வேண்டும். சிதா காசமாய் அறிவு மயமாய். பரிபூரண வடிவாய் விளங்குவோர் இவற்றைச் செய்ய வேண்டியது இல்லை.

**30. ஐயா கேளீர் தத்துவ ஞானியும் அஞ்ஞா னிகள்போலே**
**செய்யா நின்றேன் கண்டேன் உண்டேன் சென்றேன் எனலாமோ**
**பொய்ஆம் விபரீ தங்கள் அவற்குப் போயின என்றீரே**
**மெய்ஆம் பிரமவி சாரம்இது அன்றே வெளியா உரையீரே.**

ஜீவன் முக்தர்கள் அஞ்ஞானிகள் போல் நான் செய்தேன். நான் பார்த்தேன் எனக் கூறலாமா ? ஜீவன் முத்தர்களுக்கு பொய்யான ஜீவ ஈஸ்வர தோற்றம் நீங்கி விட்டதாக கூறினீர்களே உண்மையான பிரம்ம விசாரத்தை தெளிவாய் விளக்க வேண்டும்.

**31. ஓய்ந்தக னாவில் கண்டப ழுங்கதை ஓதுவன் வாதனையால்**
**ஆய்ந்துஅறிவு உற்றவன் அப்படி செய்புவன் ஆபா சனும்ஆகான்**
**மாய்ந்ததன் உடல்வேம் அளவும் விண்ணவன் மனுடன் எனப்படுவான்**
**வீய்ந்தசி தாபா சன்போம் அளவும் விவகா ரம்தொடரும்.**

புருடன் கனவில் கண்டதை நினைவுபடுத்தி கூறுவதுபோல் ஞானியும் நான் உண்டேன், நான் கண்டேன் என்று கூறினாலும் அவர் ஜீவ தோற்றம் உடையவர் அல்லர். புருடன் தேவனாக வேண்டி புண்ணிய நதியில் உயிரை விட்டாலும் உடல் வெந்து சாம்பலாகும் வரை மனிதன் எனப்படுவது போல் ஜீவன் முத்தன் விதேக முத்தி பெறும் வரை உலகோரால் ஜீவன் என்று கூறப்படுதல் தொடரும்.

**32. ஆனால் ஐயா குருவே காண்பது அசத்தியம் என்றாலும்**
**நானா விவகா ரம்துயர் அலவோ ஞானசு கம்தருமோ**
**போனால் அன்றோ நன்றுஆம் நிட்டை பொருந்திடல் வேண்டாவோ**
**தானா நிட்டை புரிந்தால் செய்கை தவிர்ந்தவன் எப்படியோ.**

காணப்படுவது யாவும் மித்தை (பொய்) என்றாலும் பற்பல விவகாரங்கள் செய்தல் ஞானிக்கு துன்பம் தரும் அல்லவா ? பிரம்மானந்தம் அப்போது கிட்டுமா ? விவகாரம் ஒழிந்தால் தான் பிரம்மானந்தம் உண்டாகும் ? சமாதி பழகுவனை கிருத கிருத்தியன் அதாவது செய்ய வேண்டியன யாவும் செய்து முடித்தவன் என்று எவ்வாறு கூற இயலும் ?

33. தெரிதரு மகனே ஆரம் பத்தொடு தீரும் விவகாரம்
உரியதி யானமும் விவகா ரங்களும் உள்ளத் தொழில்அன்றோ
துரிய பரம்பொருள் ஆனவர்வேறுஒரு தொழில்செய்வதும் உண்டோ
அரியச மாதிகள் பழகுவ னேல்அவன் ஆரு டனும்அன்றே.

உத்தம ஞானியின் காரியங்கள் பிராரத்த கர்மத்தோடு அழிந்துபோகும். சமாதிக்கான அப்பியாசம் அந்தக் கரணத்தின் செயல்கள். துரிய நிலையில் பரம பொருளாக இருக்கும் ஜீவன் முத்தன் வேறு செயல்கள் செய்வது உண்டா ? சமாதிநிலையை அப்பியாசம் செய்பவர் அப்பியாசியே தவிர ஞானியன்று.

34. உத்தம குருவே ஆரு டருமாய் ஒருதொழில் அற்றவருள்
சித்தம் அடங்குதி யானா திகள்சிலர் செய்குவது என்என்றால்
இத்தலம் மருவும் பிராரத் தப்பிறிவு எப்படி அப்படியே
முத்தரும் வெகுவிதம் ஆகுவர் என்பது முன்னே சொன்னேனே.

ஆத்ம ஞானத்தால் முத்தியடைந்து மனம் அடங்குவதற்கு ஏதுவாக தியானம் செய்வது எதற்கு என்றால் அவரவர்களுடைய பிராரத்த கர்மத்தின்படி ஜீவன் முத்தர்கள் அநேக விதமாக இருப்பார்கள்.

35. நல்லவ னேகேள் உலகுஉப காரம் ஞானிகள் விவகாரம்
அல்லது வேறுஒரு பெறுபே றும்இலை அதனால் பிணியும்இலை

வல்லசி ருட்டிமு தல்பல தொழிலால் வருபுண் ணியபாவம்
எல்லவ ருக்கும்அ னுக்கிர கம்செயும் ஈசன் அடைந்திலனே.

ஞானிகளின் செயல்கள் உலகநன்மைக்கே தவிர அவர்களுக்கு அதனால் இன்ப துன்பம் இல்லை. சிருஷ்டி முதலிய ஐந்து தொழில்களால் எல்லா ஜீவர்களுக்கும் ஏற்படும் நல்வினை தீவினைகளுக்கு ஏற்ப இன்ப துன்பத்தை அருளும் ஈசனை புண்ணிய பாவங்கள் பற்றாதது போலாகும்.

36. ஈசனும் ஆய்அரு வாய்உருவு ஆகி எழுந்துஅரு ளும்குருவே
ஈசனும் ஞானியும் ஒப்புஎன் றீரே எப்படி ஒப்புஎன்றால்
ஈசனும் ஞானியும் மமதைஅ கந்தைஇ கந்ததி னால் ஒப்பாம்
ஈசனும் ஆம்பல சீவரும் ஆம் உலகு எல்லாம் இவன்ஆமே.

அருவமான அறிவுவடிவான குருவே ஈஸ்வரனும் ஞானியும் சமம் எவ்வாறு என்றால் ஈசனும் ஞானியும் 'யான்' 'எனது' என்ற பாவனைகளை விட்டு இருத்தலால் தம்முள் ஒப்பாவார்கள். ஞானியானவர் பிரம்ம வடிவாய் உள்ளதால் அதன் கற்பிதமாய் தோன்றியுள்ள ஈசனாகவும், ஜீவராகவும் உலகாயும் ஆவார்.

37. எல்லாச் சீவரும் இவன்ஆம் என்றீர் இவன்தான் முத்திஅடைந்து
எல்லாச் சீவரும் முத்திபெ றாமல் இருப்பா னேன்ஐயா
எல்லாச் சீவரும் வெவ்வேறு ஆனால் இவன்எல் லாம் அலனே
எல்லாப் பொருளும் உரைத்துஅருள் குருவே இதைநீர் மொழியீரே.

ஞானியானவர் எல்லா ஜீவர்களாயும் உள்ளார் எனில் ஞானி முத்தியடைந்த பின்பும் எல்லா ஜீவர்களும் முத்தியடையாமல் இருப்பது ஏன் ? ஜீவர்கள் ஞானியினும் வேறாய் தனித்து

இருப்பாராயின் ஞானி அனைத்தும் ஆகான் ? இந்த சந்தேகத்துக்கு விளக்கம் தர வேண்டும்.

38. அகம்எனும் ஆன்மா பூரணம் ஏகம்அ நேகவி தம்சீவர்
அகம்எனும் அந்தக் கரணஉ பாதிகள் அளவுஇலை ஆதலினால்
சகம்முழு தும்குளிர் சந்திரன் ஏகம் சலசந் திரப்பலர் ஆம்
சகம்அதில் ஏரிகு ளம்சிறு குழிசால் சட்டிகு டம்பலவால்.

நான் என்று சொல்லப்படும் ஆன்மா பரிபூரணமும், ஒன்றாயும் இருப்பதாம் நான் என்னும் அந்தக் கரண உபாதிகள் அளவு இல்லாது அநேக விதமாய் விளங்குவதால் ஜீவர்கள் அனேக விதமாக உள்ளார்கள். சந்திரன் ஒன்று அது ஏரி, குளம், சட்டி, குடம் எல்லா நீர்களிலும் பிரதிபலித்து அநேக சந்திரன்களாக விளங்குவது போலவாம்.

39. சட்டிகு டங்களில் ஒன்றுந சித்திடின் அதினுள் சலசந்திரன்
ஒட்டுமு தல்சந் திரனொடு கூடும்ஒ ழிந்தவை கூடுவோ
கட்டும்உ பாதிந சித்திடு சீவன் காரண ஆன்மாவில்
கிட்டும்அ யிக்கியம்உ பாதிகெ டாதவர் கேவலம் ஆகாரே.

சட்டி, குடம் உடைந்தால் அதில் பிரதிபலித்த சந்திரன் வானத்தில் உள்ள சந்திரனோடு ஐக்கியம் ஆகும். ஏரி, குளத்தில் தோன்றிய சந்திரன் ஐக்கியம் ஆவதில்லை, பந்தத்திற்கு காரணமான அஞ்ஞான உபாதி தத்துவ ஞானத்தால் அழியும்போது ஜீவன் பிம்ப வடிவில் ஐக்கியம் ஆவான் ஆனால் அஞ்ஞானமாகிய உபாதி கெடாத ஏனைய ஜீவர்கள் ஐக்கியம் ஆகமாட்டார்கள்.

40. இவன் அயன் மால்சிவன் ஆகிய ஈசரொடு எப்படி ஒப்புஆவன்
சிவன்முதல் மூவரும் அகிலசி ருட்டி திதிநா சங்கள்செய்வார்

அவர்பிறர் மதிகளும் முக்காலங்களும் அறிவார் விபுஆவார்

தவம்மிகு குருவே இவனுக்கு அவையில் ஓர் சற்றும் காணேனே.

ஞானி உலகைப் படைத்து காத்து அழிக்கும் பிரம்மா விஷ்னு உருத்திரனக்கு எவ்வாறு ஒப்பாவார் ? அனைவரின் எண்ணங்களை அறிபவராகவும், முக்காலம் உணர்பவராகவும் உள்ளதால் எங்கும் நிறைந்தவர்கள் ஆவார்கள். மேற்கூறிய மகிமை கொஞ்சமும் ஞானியிடம் இல்லை. எனவே ஞானி எவ்வாறு ஈஸ்வரனுக்கு ஒப்பாவார்.

41. தடத்து நீர்நிலாத் திரிஒளி உபயமும் தழுவும்ஊர் தனைக்காக்கும்

குடத்து நீர்விளக் கினில்ஒளி இரண்டும்ஓர் குடும்பமாத் திரம்காக்கும்

அடுத்த மைந்தனே ஞானியும் ஈசனும் அறிவினால் பிறிவுஇல்லை

கெடுத்த மாயையின் குணங்களால் மேல் என்றும் கீழ்என்றும் பிரிவுஆம்.

குளத்து நீரும் தீவட்டி தீபமும் ஓர் ஊர் முழுவதும் காக்கும், குடத்து நீரும் அகல் விளக்கும் ஓர் குடும்பத்தை மட்டும் காக்கும் அளவில் வேறுபட்டாலும், காக்கும் தன்மை ஒன்றே. ஞானியும் ஈஸ்வரனும் பிரம்ம சொருபன் என்ற ஞானத்தால் பேதமில்லை சத்துவ குணமாயையில் தோன்றியவர் ஈஸ்வரன் இரஜோகுணமாயையில் தோன்றியது ஜீவன் மாயையின் குணங்களால் மட்டுமே பேதம் இதனால் ஈஸ்வரன் உயர்ந்தவர் ஞானி கீழ் என்ற பேதம்.

42. நரரின் மன்னனைச் சித்தரைப் போலவே நாரணன் முதலான

சுரர்கள் மாயைவல் லவர்அணி மாதிகள் ஒக்கமா தவம்மிக்கோர்

தரணி மானுடர்க்கு அவைகள்இல் லாமையால் தாழ்வுஉளர் ஆனாலும்

பிரம பாவனை யால்இவர் அவர்எனும் பேதம்ஒன்று இலைமாராய்.

அரசர்கள், சித்தர்கள்,மனிதர்களை விட மேலானவர்கள் திருமால் முதலிய தேவர்கள்

அட்டமா சித்திகள் கைவரப்பெற்றவர்கள். மனிதர்களான ஞானிகளுக்கு இந்த வல்லமை இல்லாததால் அவர்கள் திருமாலை விட தாழ்ந்தவர்கள் ஆனாலும் 'நான் சச்சி தானந்தன்', நித்தியன், பூரணன் என்ற பிரம்ம பாவனையில் உயர்ந்தவர் ஞானி ; தாழ்ந்தவர் என்ற பேதம் இல்லை.

43. முத்தி நல்கிய சற்குரு வேபல முனிகளுக்கு அணிமாதி
சித்தி பூமியில் கண்டிருக் கவும்அந்தச் செல்வம்ஈ சனதுஎன்றீர்
புத்தி ஒத்திட உரைத்து அருள் என்றிடில் புகழும்ஈ சனைநோக்கிப்
பத்தி செய்திடும் தவத்தினால் யோகத்தால் பலித்ததுஎன்று அறிவாயே.

பல ஞானிகள் அட்டமாசித்திகள் அறிந்தவர்கள். ஆனால் அத்தகைய குணம் ஈஸ்வரனுக்கு மட்டும் உரித்தானது என்றால் ஞானிகளுக்கு அட்டமாசித்திகள் எவ்வாறு உண்டாயிற்று என்பதை விளக்குவீராக. முனிவர்கள் ஈஸ்வரனை தியானம் செய்து பக்தி, தவம் ஆகிய யோகத்தால் அட்டமாசித்திகளை அடைந்தார்கள் என்பதை உணர்வாயாக.

44. சிவசொ ரூபம்ஆம் தேசிக மூர்த்தியே சித்திமுத் திஇரண்டும்
தவம்உ ளோர்அடை குவர்எனில் அவர்கள்போல் சகலரும் அடைவாரே
அவர்கள் பூருவம் சித்தியும் ஞானமும் அடைந்ததும் கண்டோமே
இவர்கள் ஞானிகள் என்றிடில் சித்திகள் இவர்க்கு இலா வகை ஏதோ.

தவம் செய்பவர்கள் முத்தியோடு அட்டமா சித்திகள் பெறுவார்கள் எனில் இக்காலத்து தவம் செய்வோருக்கு முத்தியோடு அணிமாதி சித்திகள் இல்லாது இருத்தலின் காரணம் யாது ?

45. காமி யத்தவம் காமியம் ஒன்றையும் கருதிடாத் தவம்என்றும்
பூமி யில்தவம் இருவகை சித்தியும் போதமும் தரும்மைந்தா

ஆம்இ வற்றில்ஒன்று இயற்றினால் ஒன்றையே அடைகுவர் இதுதீர்வை
யாம்உ ரைத்தஅவ் விரண்டையும் இயற்றினார் அன்றுஉள பெரியோரே.

தவமானது பலனை எதிர்பார்த்தும் (காமியம்) பலனை எதிர்பாராதும் ( நிஷ்காமியம் ) செய்தல் என இருவகைப்படும். காமியத்தவம் அணிமாதிசித்திகள் தரும். நிஷ்காமியம் ஞானத்தை தரும் இந்த இரண்டில் எந்த ஒரு தவத்தை செய்தாரோ அதற்கான பலனை மட்டுமே அடைவர் என்று உறுதி. அக்காலத்து முனிவர்கள் இரண்டையுமே இயற்றியதால் முத்தியும் ஞானமும் பெற்றனர்.

46. அனக மைந்தனே முத்திஞானத்தையே அடைந்தனர் அல்லாமல்
சனகன் மாபலி பகீரதன் முதலினோர் சித்திகள் படித்தாரோ
இனிய சித்தியே விரும்பினார் சிலர்சிலர் இரண்டையும் முயன்றார்அம்
முனிவர் சித்திகள் விநோதம்மாத் திரம்தரும் முத்தியைத் தாராவே.

முற்காலத்து முனிவர்கள் மோட்சத்திற்கு நேர் சாதனமான தத்துவ ஞானத்தை மட்டுமே விரும்பினர். சித்திகளை விரும்பவில்லை. சில முனிவர்கள் இருவகைத் தவங்களை மேற்கொண்டனர். சிலர் சித்திகளை மட்டும் விரும்பி பெற்றனர். சித்திகள் மோட்சத்தை தருவன அல்ல.

47. யோக ஞானமே முத்தியைத் தரும்எனில் ஒழிந்தசித் திகள்வேண்டி
மோகம் ஆய்உடல் வருந்தினார் சிலசில முத்தர்கள் ஏன் என்றால்
போகம் ஆய்வரும் பிராரத்த கர்மங்கள் புசித்தன்றோ நசித்துஏகும்
ஆகை யால் அந்தச் சித்திகள் பிராரத்தம் ஆகும்என்று அறிவாயே.

ஜீவ பிரம்ம ஐக்கிய ஞானமே முத்தியைத் தரும் எனில் சித்தியை மட்டுமே வேண்டி சில ஜீவன் முத்தர்கள் உடல் வருத்திதவம் செய்தது ஏன் என்றால் சுக துக்க அனுபவமாக வரும்

பிராரர்த்த கர்மா அதை அனுபவிப்பதால் மட்டுமே நீங்கும். அவர்கள் அடைந்த சித்திகள் அவர்களது பிராரர்த்த கர்மாவின் பலன் ஆகும்.

48. இலக்கம் ஆயிரம் சுருதியால் ஊகத்தால்
என்மனம் அசையாமல்
பெலக்க வேண்டும்என்று அருள்குரு வேஅகப்
பிராந்திபோய்த் தெளிவு ஆனேன்
துலக்கம் ஆனகண் ணாடியை அடிக்கடி
துலக்கினால் பழுதுஅன்றே
அலக்கண் மாற்றிய தேவரீர் எனக்குஉரை
அமிர்தங்கள் தெவிட்டாவே.

அளவில்லாத சுருதி வாக்கியங்கள் மற்றும் யுத்திகளால் என்மனம் பிரம்ம சொரூபத்தை விட்டு அகலாமல் திடமாய் அதில் அழுந்த அருளிய குருவே. நான் மனகலக்கம் நீங்கி தெளிவுபெற்றேன். எனது பிறவித் துன்பத்தை நீக்கி அருளிய உபதேசம் அமிர்தம் தெவிட்டவில்லை.

49. கைதவங்களைச் சாத்திரம் சொல்லுமோ கருணையால் எனை ஆளும்
ஐய னேகுரு வேஎவர் ஆகிலும் அனுபவித்தால் அன்றிச்
செய்த கர்மங்கள் விடாஎன்ற வசனமும் சென்மசஞ் சிதம்வேவத்
தூய்ய ஞானத்தீச் சுடும்என்ற வசனமும் துணிவது எப்படிநானே.

கர்ம காண்ட வேத வாக்கியம் யாராக இருந்தாலும் முன்வினைப் பயனை அனுபவித்தால் அன்றி அது அழியது என்றும் ஞான காண்ட வேத வாக்கியம் எண்ணற்ற பிறவிகளுக்கு காரணமான சஞ்சித கர்மாவை ஞானாக்கினி எரித்துவிடும் என்ற இரண்டில் இது தான் உண்மை என நான் எவ்வாறு நிச்சயிப்பது ?

**50. சீவ பேதங்கள் அளவிலை மைந்தனே செய்கையும் அளவில்லை**
**ஆவ ஆம்அவர் அவர்அதி காரங்கள் அறிந்துபக் குவம்நோக்கிப்**
**பூஅ லர்ந்துபின் பலங்கள்காட் டுவனபோல் பூருவம் சித்தாந்தம்**
**காவல் வேதங்கள் இரண்டையும் வசனிக்கும் காண்டம்மூ**
**வகையாலே.**

'நான்' என்ற தன் முனைப்பு அந்தக் கரண உபாதிகள் அளவற்றது. அதனால் ஜீவர்களின் பேதமும் செயல்களும் அளவற்றது. அவர்களது அதிகாரி பேதம் பக்குவத்திற்கேற்ப கர்மம், பக்தி, ஞானம், என்ற மூவகைச் சாதனம் கொடுத்து காக்கும். பூ மலர்ந்து பின் கனியாவது போல் இரு விதமாக கர்ம நாசத்தை வேதம் கூறியுள்ளது.

**51. ஆன பாவிகள் அடைவன நரகங்கள் அவசியம் ஆனாலும்**
**தான மந்திர விரதஓ மங்களால் தவிரும்என் பதுபொய்யோ**
**ஈனம்ஆம்பல சன்மசஞ் சிதவினை எத்தனை ஆனாலும்**
**ஞானம் ஆம்கனல் சுடும் என்ற மறைமொழி நம்பினால் வீடுஉண்டே.**

தீவினை செய்பவர் நரகம் செல்வர் என்பது நிச்சமாயினும் தானம், மந்திரஜபம், விரதம், யாகம் போன்ற பிராயச் சித்தத்தால் பாவ நிவர்த்தி கிட்டும். இழிவான பல பிறவிகளுக்கு காரணமான சஞ்சித கர்மா எவ்வளவு இருந்தாலும் அதனை ஞானாக்கினி அழித்து விடும். என்ற வேத வாக்கியத்தை நம்பினால் சஞ்சித வினை நீங்கி மோட்சம் கிட்டும் என்பது நிச்சயம்.

**52. என்ம னம்திருக் கோயிலாத் தினம்குடி இருந்துஅருள் குருமூர்த்தி**
**சென்ம சஞ்சித வினைகள்வேர் அறுத்திடும் தேவரீர்**
**மெய்ஞ்ஞானம்**
**தன்ம யம்தரும் மகிமையை விபுதராம் சமர்த்தரும் அறியாமல்**
**கன்மம் ஆம்குழி யினில்விழுந்து ஆழ்கின்ற காரணம் உரையீரே.**

தத்துவ ஞானமானது பல பிறவிகளைக் கொடுக்கக் காரணமாக சஞ்சித வினையை அடியோடு அறுத்து முத்தி தரும் அதிகம். கற்று அறிந்தவரும் இந்த உண்மையை அறியாது கர்மங்களைச் செய்வதால் தான் முத்தி கிடைக்குமெனக் கருதி வீழ்வது எதனால் ?

53. அழிவுஇ லாததற் பதம்தனை மைந்தனே அகமுகத் தவர்சேர்வர்
வழிந டப்பவர் பராமுகம் ஆயினால் மலர்ந்தகண் இருந்தாலும்
குழியில் வீழ்வர்காண் அப்படி வெளிமுகம் கொண்டுகா மிகள்
ஆனோர்
பழித ரும்பிற விக்கடல் அழுந்துவர் பரகதி அடையாரே.

'தான்' பிரம்ம சொருபம் என காண்போர் மட்டுமே நித்தியமான பிரம்மத்தை அறிவார்கள். மற்றவர்கள் அறியமாட்டார்கள் செல்லும் பாதையை சரியாக கவனியாமல் செல்பவர்கள் கண்விழித்து இருந்தாலும் பள்ளத்தில் வீழ்வர். சொர்காதி போகங்களை மட்டும் விரும்பி கர்மம் செய்பவர்கள் பழிக்க தக்க பிறவிக் கடலில் மூழ்கி துன்பப் படுவாரே அன்றி மோட்சம் அடைய மாட்டார்கள்.

54. சிறந்த நன்மையும் தீமையும் ஈசனார் செய்விக்கும் செயல்அன்றோ
பிறந்த சீவர்கள் என்செய்வார் அவர்கள்மேல் பிழைசொலும் வழிஏதோ
துறந்த தேசிக மூர்த்தியே என்றிடில் சுருதிநூல் பொருள்மார்க்கம்
மறந்த மூடர்கள் வசனிக்கும் பிராந்திகாண் மைந்தனே அதுகேளாய்.

ஈஸ்வரனின் ஆணைப்படி பிறந்த ஜீவர்கள் செய்கின்ற நல்வினை தீவினைகளுக்கு ஜீவர்களை குறை சொல்ல காரணம் யாது ? வேத சாஸ்திர நெறியை மறந்த மூடர்கள் மயக்கத்தில் கூறும் மொழிகள் அவை.

55. திகழ்ந்த ஈசனார் சிருட்டியும் சீவனார் சிருட்டியும் வெவ்வேறே.

சகந்த னில்பொது ஈசனார் சிருட்டிகள் சராசரப் பொருள்எல்லாம்

அகந்தை யாம்அபி மானங்கள் கோபங்கள் ஆசைகள்

இவைஎல்லாம்

இகழ்ந்த சீவனார் சிருட்டிகள் ஆகுங்காண் ஈசனார் செயலன்றே.

சுத்த பிரம்மமாக விளங்கும் ஈஸ்வரனது சிருஷ்டியும், ஜீவனது சிருஷ்டியும் வெவ்வேறானவை. உலகில் உள்ள அனைத்து ஜீவராசிகளையும் படைப்பது ஈஸ்வரன். யான், எனது, கோபம், ஆசை இவைகள் ஈஸ்வரனின் செயல் அல்ல இவைகள் அனைத்தும் ஜீவனது இழிவான சிருஷ்டியாகும்.

56. மூவர் ஆம்பரன் சிருட்டிகள் உயிர்க்குஎலாம் முத்திசா தனம்ஆகும்

சீவ னார்செயும் சிருட்டிகள் தங்களைச் சிருட்டிக்கும் பிணிஆகும்

தாவ ராதிகள் நசித்திடில் ஒருவருக்கும் சனனங்கள் நசியாவாம்

கோபம் ஆதிகள் நசித்திடில் பந்தம்ஆம் கொடும்பிற விகள்போமே.

ஈஸ்வரனின் சிருஷ்டிகள் ஜீவர்களுக்கு மோட்ச சாதனமாக உள்ளது. ஜீவனது சிருஷ்டிகள் அவைகளை மீள பிறக்கச் செய்யும் பந்தமாகவே உள்ளது. ஈஸ்வர சிருஷ்டிகள் நாசமாகும் போது பிறவி அழிவதில்லை கோபம் முதலிய குணங்கள் நசித்தால் கொடிய பிறவிகள் நாசமாகும்.

57. ஈசர் காரியம் பிரளயத்து ஒழியவும் எவர்பவம் ஒழிந்தார்கள்

தேச காலதே காதிகள் இருக்கவும் சீவகா ரியமோகம்

நாசம் ஆக்கிய விவேகத்தின் உயிரொடு ஞானமுத் தர்கள் ஆனார்

பாச மோகங்கள் பசுக்களின் செயல்அன்றிப் பசுபதி

செயல்அன்றே.

மகா பிரளயத்தின் போது ஒருவரும் முத்தி அடைவதில்லை ஜீவ சிருஷ்டியான மோகம், அகங்காரம் விவேகத்தால் நாசம், செய்து ஜீவன் முத்தரானவர்கள் உண்டு. பந்தத்திற்கு காரணமான அகங்காராதிகள் ஜீவ சிருஷ்டியே அன்றி ஈஸ்வர சிருஷ்டியன்று.

58. அச்சு வத்தம்என்று ஒருமரம் அதில்இரண்டு அரும்பற
வைகள்வாழும்
நச்சும் அங்குஒரு பறவைஅம் மரக்கனி நன்றுநன்று
எனத்தின்னும்
மெச்சும் அங்குஒரு பறவைதின் னாதுஎன வியங்கிஅப்
பொருள் ஆக
வைச்சு மாமறை சீவனை ஈசனை வகுத்தவாறு அறிவாயே.

முண்டக உபநிடதத்தில் ஒரு மரத்தில் உள்ள இருபறவைகளில் ஒருபறவை அம்மரத்து கனியை உண்ணும் மற்றது உண்ணாது என்று ஜீவ ஈஸ்வர பேதத்தை உணர்த்துகிறது. சரீரமாகிய மரத்தில் வாழும் ஜீவன் அஞ்ஞானத்தால் போகத்தை புசிக்க, சத்துவ குணமுடைய ஈஸ்வரர் போகத்தை புசிப்பதில்லை.

59. இந்தச் சீவனால் வரும்அறு பகைஎலாம் இவன்செயல் என்னாமல்
அந்தத் தேவனால் வரும்என்ற மூடர்கள் அதோகதி அடைவார்கள்
இந்தச் சீவனால் வரும்அறு பகை எலாம் இவன்செயல் அல்லாமல்
அந்தத் தேவனால் அன்றுஎனும் விவேகிகள் அமலவீடு அடைவாரே.

காமம், குரோதம், உலோகம், மோகம், மதம் மாற்சரியம் என்ற இந்த ஆறு வகைப் பகைகள் ஜீவனது செயல் என்று உணராது. இது ஈஸ்வரனின் செயல் என்று எண்ணும்

அறிவிலிகள் நரகமடைவர். இவைகள் ஜீவனின் செயல்களே அன்றி ஈஸ்வரனின் செயல் அல்ல எண்ணும் விவேகிகள் மோட்சத்தை அடைவர்.

60. நலமெய் ஐயனே எல்லவர்க் கும்தெய்வ நாயகன்
பொதுஆனால்
சிலரை வாழ்வித்தல் சிலரொடு கோபித்தல் செய்வது ஏன்
என்றாயேல்
குலவு மக்களைத் தந்தைபோல் சிட்டரைக் குளிர்ந்துதுட்
டரைக்காய்வன்
கலைகள் நல்வழி வரச்செயும் தண்டமும் கருணை என்று
அறிவாயே.

எல்லோரிடமும் சமமாக இருக்கும் ஈஸ்வரன் சிலரை மகிழ்வோடும் சிலரை துன்பத்திலும் வைத்ததற்கு காரணம்யாது ? ஈஸ்வரனும் தான் விதித்தவாறு செய்தும், விதியாததை தவிர்த்து இருப்போருக்கு இன்பத்தையும், விலக்கிய நெறியில் செல்வோரை தண்டிக்கிறான். ஈஸ்வரன்தீயோரை தண்டிப்பது அவர்களுக்கும் நன்மை செய்யும் கருணையே ஆகும்.

61. மனைவி லங்குஅறு மைந்தனே கற்பக
மரம்கனல் புனல்மூன்றும்
தனைஅ டைந்தவர் வறுமையும் சீதமும்
தாகமும் தவிர்த்துஆளும்
அனைய ஈசனும் அடைந்தவர்க்கு அருள் செய்வன்
அகன்றவர்க்கு அருள்செய்யான்
இனைய குற்றங்கள் எவர்குற்றம் ஆகும்என்று
எண்ணிநீ அறிவாயே.

கற்பக மரம், அக்னி, நீர், மூன்றும் தம்மை அடைந்தோரை, வறுமை, குளிர், தாகம் போக்கி காக்கும். ஈஸ்வரனும் தன்னை வழிபடுவோரை காத்து அருள்செய்வார். வழிபடாதவருக்கு அருள் செய்வார். வழிபடாதது ஜீவினின் குற்றமே ஆகும்.

62. ஒன்று கேள்மக னேபுமான் முயற்சியால் உறைத்துமா
னூடர்க்குஈசன்
நன்று செய்யவே காட்டிய நூல்வழி நடந்துநல் லவர்பின்னே
சென்று துட்டவா தனைவிட்டு விவேகராய்ச் செனித்தமா
யையைத்தள்ளி
நின்று ஞானத்தை அடைந்தவர் பவங்கள்போம் நிச்சயம்
இதுதானே.

மோட்சம் அடைவதற்காக வைராக்கியத்தோடு சாஸ்திரநெறி பின்பற்றி மும்மலம் ஒழித்து ஆன்ம, அநான்ம விவேகம் உடையவராய் மாயையின் பேத புத்தியை நீக்கி தமது நிச வடிவில் பிறழாது இருந்து ஜீவ பிரம்ம ஐக்கிய ஞானத்தைப் பெற்றவர்களுக்குப் பிறவிகள் நீங்கும்.

63. இந்த ஞானந்தான் வருவதுஎப் படிஎனில் இடைவிடா
விசாரத்தால்
வந்து அடைந்திடும் விசாரந்தான் ஏதுஎனின் மன ஆதியாம்
சரீரத்தில்
இந்த நான்எவன் சித்துஎது சடம்எது இரண்டும்ஒன்
றாக்கூடும்
பந்தம் ஏதுவீடு ஏதுஎன உசாவுதல் பகர்விசா ரம்அதுஆகும்.

ஜீவ பிரம்ம ஐக்கிய ஞானம் விசுவாசத்தோடு செய்யும் விசாரத்தால் சித்திக்கும். மனம் முதலிய காரண, சூட்சும தூல சரீரங்களில் நான், என்று சொல்வது எது ? சித்து எது ? சடம் எது ? சித்து, சடம் இரண்டும் பொருந்துகின்ற பந்தம் யாது ? மோட்சம் யாது ? என எப்போதும்

சிந்திப்பதே விசாரம் ஆகும்.

64. போன சன்மங்கள் தம்மில் அனுட்டித்தநல் புண்ணிய பரிபாகம்
ஞானம் ஆக்குமே விசாரம்ஏன் என்றிடில் நாம்உரைத் திடக்கேளாய்
ஆன புண்ணியம் ஈசுரார்ப் பணம்செயின் அசுசிபோம் சுசி ஆகும்
மான தம்பினை விசாரித்து ஞானத்தை மருவும்என்று அறிவாயே.

புண்ணிய கருமத்தின் பலன் ஞானம் தராதா ? விசாரம் ஏன் செய்ய வேண்டுமெனில் தத்தம் வருண ஆசிரமத்திற்குரிய புண்ணியச் செயல்களை ஈஸ்வர அர்ப்பணமாக செய்தால் மனம் காமக் குரோதாதி அசுத்தம் நீங்கி தூய்மை பெறும் அந்த மனமே ஆத்ம, ஆநாத்ம விசாரத்தைச் செய்து ஞானம் பெறும்.

65. பத்தி யும்வயி ராக்கிய மும்பர லோகமும் அணிமாதி
சித்தி யும்தவ நிட்டையும் யோகமும் தியானமும் சாருப
முத்தி யும்தரும் விசித்திர கருமங்கள் மோகமாத் திரம்தள்ளும்
புத்தி தந்திடல் அருமையோ விசாரம்ஏன் புண்ணிய குருமூர்த்தி.

ஈஸ்வரபக்தி, வைராக்கியம், சொர்க்க லோக பிராப்தி அணிமா முதலிய அட்டமா சித்கள், தவம், யோகம், தியானம், சாருப மோட்சம் ஆகிய இவற்றை சற்கருமங்கள் தரும். இந்த கருமங்கள் மோகத்தை மட்டும் கெடுக்கும். ஞானத்தை கொடுப்பது அருமையாகுமா ? அப்படியிருக்க விசாரம் ஏன் செய்ய வேண்டும் ?

66. வேடம் மாறிய பேர்களை அறியவே வேண்டினால் மகனேகேள்
கவடம் ஆம்அவர் கபாவங்கள் சீலங்கள் குறிகள் ஆய்ந்து அறியாமல்
ஓடி யும்குதித் தும்தலை கீழ்நின்றும் உயர்ந்தகம் பத்துஏறி
ஆடி யும்பல கருமங்கள் செய்யினும் அவர்உண்மை தெரியாதே.

மாறுவேடம் அணிந்துள்ளவர்களின் உண்மையை அறிய அவரின் குணம், ஒழுக்கம், அடையாளம் இவற்றை விசாரித்து அறிய வேண்டும். அவ்வாறு இல்லாமல் தேவையற்ற செயல்களைச் செய்தாலும் அவரின் உண்மை வடிவத்தை அறிய இயலாது.

67. இன்ன வாறுஅந்தப் பிரமத்தை அறிவிக்கும் இலக்கணத் தால்வேதம்
சொன்ன ஞானமும் விசாரத்தால் வரும்அன்றிச் சுருதிநூல் படித்தாலும்
அன்ன தானங்கள் தவங்கள்மந் திரங்கள்ஆ சாரங்கள் யாகங்கள்
என்ன செய்யினும் தன்னைத்தான் அறிகின்றது இவைகளால் வாராதே.

பிரம்மத்தின் உண்மையை வேதத்தில் கூறப்பட்டுள்ள சொரூபம், தடத்தம், அதத்வியாவிருத்தி இலக்கணங்களை விசாரணை செய்து அறியலாமே அன்றி சாத்திரம் படித்தல், தவம், ஜபம், அன்னதானம் இவற்றால் பிரமத்தின் உண்மை வடிவை அறியும் ஆத்ம ஞானம் வராது.

68. துளங்கு தர்ப்பண அழுக்குஅறக் கைக்கொண்டு
துலக்கினால் போம்அன்றி
விளங்கு புத்தியால் உலகில்ஆர் துலக்கினார்
விமலதே சிகமூர்த்தி
களங்கம் ஆகும்அஞ் ஞானமும் அப்படிக்
கருமத்தால் கழுவாமல்
உளங்கு றித்தஞா னத்தினால் எப்படி
ஒழியும்ஈது அருள்வீரே.

கண்ணாடியில் உள்ள அழுக்கு துடைத்தல் நீங்கும். புத்தியால் செய்யும் விசாரத்தால் நீங்காது. ஆன்மாவை மறைக்கும் அஞ்ஞானமும் புண்ணிய கர்மத்தால் நீங்காது மனத்தால் மித்தை என நிச்சயிக்கப்படும் ஞானத்தால் எவ்வாறு நீங்கும் ?

69. தர்ப்ப ணத்தினில் களிம்புவாஸ் தவமலம் சகசம்ஆ தலின்மைந்தா
கற்ப ளிங்கினில் கருநிறம் சகசமாக் கறுத்ததுஅன்று ஆரோபம்.
தர்ப்ப ணத்தினில் அழுக்குஅற வேண்டினால் சாதனத்
தொழில்வேண்டும்
கற்ப ளிங்கில்ஆ ரோபமே கறுப்புஎன்று கண்டிட மனம்போம்.

செம்பில் களிம்பு படிவது சுபாவம் அதை நீக்க சாதனமாகிய செயல் வேண்டும். பளிங்கினில் கருநிறம் பொய்த் தோற்றம் இதை அறிய மனதினால் விசாரம் செய்தால் மட்டும் போதும்.

70. இங்கும் அப்படிச் சச்சிதா னந்தத்தில் இடர்சடம் பொய்மூன்றும்
தங்கும் மாயையின் கற்பிதம் அன்றியே சகசவாஸ் தவம்அன்றே
பங்கம் ஆகும்அஞ் ஞானத்தைக் கருமங்கள் பகைசெயாது
உறவுஆக்கும்
துங்க ஞானமே கருமஅஞ் ஞானத்தைச் சுடுகின்ற நெருப்புஆமே.

சச்சிதானந்த வடிவ ஆன்மாவில் தோன்றும் அசத்து, சடம், துக்கம் எல்லாம் கற்பனையே அன்றி சுபாவமும் சத்தியமும் அன்று. புண்ணிய கர்மங்கள் அஞ்ஞானத்தை அழிக்காது. ஜீவ பிரம்ம ஐக்கிய ஞானமே சஞ்சித கருமத்தையும் அஞ்ஞானத்தையும் எரித்துக் கொடுக்க வல்ல தீயாகும்.

71. மனைக்குள்வைத்தபண்டங்களைமறந்தவன்வருடம்நூறு அழுதாலும்
நினைத்து உணர்ந்தபின் கிட்டும்அப் படிஇந்த நின்மல ஆன்மாவும்

**அனர்த்தம் ஆனதன் மறதியைக் கெடுத்துத்தன் அறிவினால்**
**காணாமல்**
**கனத்த கர்மங்கள் நூறுஉகம் செய்யினும் காணுமோ காணாதே.**

வீட்டிற்குள் மறைத்து வைத்த பொருளை மறந்துபோனவன் அழுவதால் அந்தப் பொருள் கிட்டாது. அந்த இடத்தைப் பற்றி சிந்தித்து அறிவதால் கிடைக்கும். மறதியை விசாரத்தால் நீக்கி அறிவினால் தான் சச்சிதானந்தன் என்று நிச்சயம் செய்ய வேண்டும். புண்ணிய கருமத்தால் ஆத்மா காணப்படாது.

72. **நன்மை ஆம்குரு வேசுகம் தருவது ஞானமே எனும்வேதம்**
**தன்ம பாவம்மிச் சிரங்களால் தேவர்கள் தருவிலங் குகள்மாந்தர்**
**சென்மம் ஆகுவ சாதிஆ சாரமே செய்தவம் சுகம்என்று**
**கன்ம காண்டத்தில் விதித்ததுஎன் விதித்துஉள காரணம்**
**உரையீரே.**

பரமானந்த சுகம் அளிப்பது ஜீவ பிரம்ம ஐக்கிய ஞானம், புண்ணிய பாவ, மிசிர கர்மத்தால் பிறவிகள் உண்டாகும். தத்தம் சாதிக்குரிய ஒழுக்கம் தவம் ஆகும். அத்தகைய கர்மத்தால் சுகம் கிட்டும் என்று கர்ம காண்டத்தில் விதித்து இருப்பதன் காரணம் யாது ?

73. **தினமும் மன்றுகர் பிள்ளைநோய்க்கு இரங்கியே**
**தீம்பண்டம் எதிர்காட்டிக்**
**கனம குந்துகள் ஒளித்துதவைத்து அழைக்கின்ற**
**கருணைநற் றாய்போலே**
**மனை அ றங்கள் செய் மகங்கள்செய் நன்றுஎன்று**
**மலர்ந்தவா கம்சொல்லும்**

நினைவு வேறுகாண் சுவர்க்ககா மிகள் அந்த

நிண்ணயம் தெரியாரே.

மண் உண்டு நோய்வாய் பட்ட குழந்தைக்கு இனிப்பு திண்பண்டத்தில் மருந்தை மறைத்து கொடுக்கும் தாய் போல் இல்வாழ்க்கைக்கு உரிய தருமம், யாகங்கள் செய்வதால் சுகம் கிட்டும் என வேதம் கூறுவதன் அர்த்தம் வேறு. சுவர்க்க போகத்தில் விருப்பம் கொண்டவர்கள் அக்கருத்தை உணர மாட்டார்கள்

74. போகம் ஆர்உயிர் கண்டதை உண்பதும் புணர்வதும் இயல்பேகாண்

ஆக மங்களும் சுபாவத்தை விதிக்குமோ அத்தனை தெரியாதோ

காக மேகறுத் திடுநெருப் பேசுடு கசந்திடு வேம்பேநீ

வேக வாயுவே அசைஎன ஒருவரும் விதித்திடல் வேண்டாவே.

போகத்தை விரும்பும் ஜீவர்கள் உண்பது, பெண்ணை இச்சிப்பது இயல்பானது அவர்களுக்கு விதிக்க வேண்டியது இல்லை காக்கையை கருப்பாகு என்றும், நெருப்பை சுடு என்றும், வேம்பினை கசப்பாய் இரு என்றும் காற்றினை அசைவாய் என்று யாரேனும் அவற்றிற்கு விதிக்க வேண்டியது இல்லை.

75. கள்ளும் ஊனும்நீ விரும்பினால் மகங்கள்செய்

காமத்தின் மனதுஆனால்

கொள்ளும் பெண்வொடு கலவிசெய் எனில்இவன்

குறைஎலாம் தொடான்என்றே

தள்ளும் வேதத்தின் சம்மதம் சகலமும்

தவிர்வதே கருத்து ஆகும்

அனர்த்தம் ஆனதன் மறதியைக் கெடுத்துத்தன் அறிவினால்
காணாமல்
கனத்த கர்மங்கள் நூறுஉகம் செய்யினும் காணுமோ காணாதே.

வீட்டிற்குள் மறைத்து வைத்த பொருளை மறந்துபோனவன் அழுவதால் அந்தப் பொருள் கிட்டாது. அந்த இடத்தைப் பற்றி சிந்தித்து அறிவதால் கிடைக்கும். மறதியை விசாரத்தால் நீக்கி அறிவினால் தான் சச்சிதானந்தன் என்று நிச்சயம் செய்ய வேண்டும். புண்ணிய கருமத்தால் ஆத்மா காணப்படாது.

72. நன்மை ஆம்குரு வேசுகம் தருவது ஞானமே எனும்வேதம்
தன்ம பாவம்மிச் சிரங்களால் தேவர்கள் தருவிலங் குகள்மாந்தர்
சென்மம் ஆகுவ சாதிஆ சாரமே செய்தவம் சுகம்என்று
கன்ம காண்டத்தில் விதித்ததுஎன் விதித்துஉள காரணம்
உரையீரே.

பரமானந்த சுகம் அளிப்பது ஜீவ பிரம்ம ஐக்கிய ஞானம், புண்ணிய பாவ, மிசிர கர்மத்தால் பிறவிகள் உண்டாகும். தத்தம் சாதிக்குரிய ஒழுக்கம் தவம் ஆகும். அத்தகைய கர்மத்தால் சுகம் கிட்டும் என்று கர்ம காண்டத்தில் விதித்து இருப்பதன் காரணம் யாது ?

73. தினமும் மண்நுகர் பிள்ளைநோய்க்கு இரங்கியே
தீம்பண்டம் எதிர்காட்டிக்
கனம ருந்துகள் ஒளித்துதவைத்து அழைக்கின்ற
கருணைநற் றாய்போலே
மனை அ றங்கள் செய் மகங்கள்செய் நன்றுஎன்று
மலர்ந்தவா கம்சொல்லும்

**நினைவு வேறுகாண் சுவர்க்ககா மிகள் அந்த**

**நிண்ணயம் தெரியாரே.**

மண் உண்டு நோய்வாய் பட்ட குழந்தைக்கு இனிப்பு திண்பண்டத்தில் மருந்தை மறைத்து கொடுக்கும் தாய் போல் இல்வாழ்க்கைக்கு உரிய தருமம், யாகங்கள் செய்வதால் சுகம் கிட்டும் என வேதம் கூறுவதன் அர்த்தம் வேறு. சுவர்க்க போகத்தில் விருப்பம் கொண்டவர்கள் அக்கருத்தை உணர மாட்டார்கள்

**74. போகம் ஆர்உயிர் கண்டதை உண்பதும் புணர்வதும் இயல்பேகாண்**

**ஆக மங்களும் சுபாவத்தை விதிக்குமோ அத்தனை தெரியாதோ**

**காக மேகறுத் திடுநெருப் பேசுடு கசந்திடு வேம்பேநீ**

**வேக வாயுவே அசைஎன ஒருவரும் விதித்திடல் வேண்டாவே.**

போகத்தை விரும்பும் ஜீவர்கள் உண்பது, பெண்ணை இச்சிப்பது இயல்பானது அவர்களுக்கு விதிக்க வேண்டியது இல்லை காக்கையை கருப்பாகு என்றும், நெருப்பை சுடு என்றும், வேம்பினை கசப்பாய் இரு என்றும் காற்றினை அசைவாய் என்று யாரேனும் அவற்றிற்கு விதிக்க வேண்டியது இல்லை.

**75. கள்ளும் ஊனும்நீ விரும்பினால் மகங்கள்செய்**

**காமத்தின் மனதுஆனால்**

**கொள்ளும் பெண்வொடு கலவிசெய் எனில்இவன்**

**குறைஎலாம் தொடான்என்றே**

**தள்ளும் வேதத்தின் சம்மதம் சகலமும்**

**தவிர்வதே கருத்து ஆகும்**

விள்ளும் இவ்விதி என்எனில் பூருவ

நியமம்ஆம் விதிஅன்றே.

மது மாமிசம் உண்ண விரும்பினால் அதை யாகம் செய்து உண். காமத்தில் மனம் சென்றால் மனைவியிடம் காமத்தை அனுபவி இவ்வாறு விதித்தால் மனம் போனபடி நடவாது இருப்பான். இது கர்ம காண்ட நியமம் ஆகும். ஞான காண்ட முடிவு அல்ல. அனைத்தையும் விட்டு ஒழிப்பதே வேத சம்மதமாம்.

76. மதுஇ றைச்சிகள் உண்என்ற சுருதிபின் மணந்துபார் எனல்பாராய்

மிதுன இச்சையும் புத்திரஉற் பத்தியால் விரும்புஎன்ற விதிபாராய்

இதையும் விட்டுஒழி அதிநயிட் டிகவந்திக்கு இகழ்ச்சிஅற் றதும்பாராய்

அதைஅ றிந்துகன் மங்கள்ஆ சைகள்ஒழிந்து ஆனந்தம் அடைவாயே.

மது மாமிசங்களை உண்ணாது நுகர் என்றும். நல்ல குழந்தைகளைப் பெற மட்டும் மனைவியுடன் சேர் என்று வேதம். கூறியுள்ளதையும் அறிவாயாக. சந்நியாசி. பிரம்மச்சாரி ஆகியோருக்கு பழி இல்லை. கர்மங்கள் ஆசைகளை ஒழித்து உண்மையான ஆனந்தம் அடைவாய்.

77. உலகம் ஆனஅஞ் ஞானமும் கருமமும் உறவுஎன்ற வழிகூடும்

பலவும் ஆன அஞ் ஞானமும் ஞானமும் பகைஎன்பது

உளது ஆனால்

நிலவி லேமறுப் போலஅஞ் ஞானமும் நிமலஞா னத்தோடே

குலவி நின்றுஇந்தச் சிருட்டிகள் செய்யவும் கூடுமோ குருமூர்த்தி.

உலக வடிவ பரிணாமத்தை அடைந்த அஞ்ஞானமும், யாகாதி வினைகளும் விரோதமின்றி உள்ளன. பல நாம ரூபங்கொண்ட அஞ்ஞானமும் விகாரமே இல்லாத பிரம்மமும் வேறுபட்டு உள்ளது. உண்மை அஞ்ஞானமானது பிரம்மத்துடன் கூடி நின்று இவ்வுலகை படைப்பது எவ்வாறு ?

78. சொரூப ஞானமும் விருத்திஞா னமும்என்று
சோதிஞா னமும்இரண்டாம்
சொரூப ஞானமே விருத்தியின் ஞானமாய்த்
தோன்றும்வேறு இலைமைந்தா
சொரூப ஞானஅஞ் ஞானசத் துருஅன்று
சுழுத்தியில் கண்டாயே
சொரூப ஞானத்தின் மருவும்அஞ் ஞானத்தைச்
சுடும்விருத் தியின்ஞானம்.

சொரூப ஞானம் விருத்தி ஞானம் என இரண்டு வகையான ஞானத்தில் சொரூப ஞானமே விருத்தி ஞானமாக மாறும். சொரூப ஞானம் அஞ்ஞானத்திற்கு பகை அன்று. சொரூப ஞானத்தின் கற்பிதமான அஞ்ஞானத்தை விருத்தி ஞானம் அழிக்கும். எனவே விருத்தி ஞானமே அஞ்ஞானத்தின் விரோதியாகும்.

79. துருத்தி மாயையைச் சுழுத்தியில் சுடாததற் சொரூபஞா னந்தானே
விருத்தி ஞானமாய்ச் சுட்டதுஎப் படிஎனில் வெய்யிலால் உலகுஎங்கும்
பரித்த சூரியன் சூரிய காந்தத்தில் பற்றிஅக் கினிஆகி
எரித்த வாறுபோல் சமாதியில் விருத்தியால் எரிக்கும்என்று அறிவாயே.

சூரிய ஒளி எந்தப் பொருளையும் எரிக்காது ஆனால் சூரிய காந்தக் கல்லில் பொருத்திய சூரிய கிரணங்கள் பொருளை எரிக்கும். சமாதி நிலையில் விருத்தி ஞானம் அக்கினிபோன்று அஞ்ஞானத்தை எரிக்கும்.

80. அருளும் ஐயனே திரிவித கரணத்தால் ஆகிய
தொழில்எல்லாம்
கருமம் அல்லவோ விருத்திஞா னமும்அந்தக் கரணகா
ரியம்அன்றோ
உரிய கர்மம்அஞ் ஞானத்தைக் கெடுக்கும்என்று ஓதினால்
ஆகாதோ
பெரிய ஞானம்என்று அதற்குஒரு பெயர்இட்ட பெருமையை
உரையீரே.

மனம், வாக்கு, காயம் என்ற மூன்று கரணங்களால் செய்யப்படுபவை எல்லாம் கர்மங்கள். எனவே 'நான் பிர்ம்மம்' என்ற விருத்தி ஞானமும் மனதின் கர்மம் ஆகும். விருத்தி ஞானம் மனதின் கர்மம் என்றால் அந்த கர்மம் அஞ்ஞானத்தைக் கெடுத்தது என்று ஏன் கூறலாகாது ? விருத்தி ஞானம் என தனி பெயரிடம் காரணம் யாது ?

81. விருத்தி ஞானம்அந் தக்கர ணத்தோடு விருத்திஆ
கிலும்மைந்தா
ஒருத்தி மக்களே தங்களில் பகைக்கின்றது உலகுஎங்கும்
கண்டோமே
கருத்தன் ஆகிய புருடதந் திரங்களாம் கருமங்கள்
அவைபோல
வருத்த ஞானமோ புருடதந் திரம்அன்று வஸ்துதந் திரம்ஆமே.

அகம் பிரம்மம் என்ற விருத்தி ஞானமும் அந்தக் கரணத்தின் காரியம், அந்தக் கரண காரியங்களும் விருத்தி ஞானமும் பகையாக உள்ளன. கர்மம் ஜீவன் தன் விருப்பப்படி செய்வது. இது புருடனைச் சார்ந்தது. எனவே விருத்தி ஞானம் புருடதந்திரம் ஆகாது. வஸ்துவைச் சார்ந்தது ஆகும்.

82. வகுத்த கர்மங்கள் செய்யவும் தவிரவும் மற்றுஒன்றுஆக்
கவும்கூடும்
மிகுத்த ஞானம்அப் படிஅன்று தியானமும் விவேகஞா
னமும்வேறே
செகத்தில் ஒன்றைஒன் றாஇவன் பாவிக்கும் தியானம்கற்
பிதயோகம்
முகத்த மார்க்கண்ட ஞானமே வாஸ்தவ மோகமாய்
மயங்காதே.

சாஸ்திரங்களில் விதித்த கர்மங்களைச் செய்யவோ, செய்யாதிருக்கவும் ஆகும் ஞானம் அவ்வாறல்ல தியானம் என்ற கர்மமும். விவேகம் என்னும் ஞானமும் அந்தக் கரண காரியமே ஆனாலும் வேறுபட்டவை. ஒன்றை மற்றொன்றாக பாவிக்கும் தியானம் கற்பனையாகும். பிரத்தியட்சமாக அறிந்த ஞானமே உண்மையாகும். எனவே இந்த பேதத்தை உணர்வாயாக.

83. கண்டு அறிந்தது ஞானம்கேட் டதுதனைக் கருதுபா வனையோகம்
கண்ட பேர்சொலக் கேட்டது மறந்துபோம் கண்டது மறவாதே
கண்ட வஸ்துமெய் தியானவஸ் துக்கள்பொய் கறுவிஅஞ்
ஞானத்தைக்
கண்ட அக்கணம் கொல்வது ஞானமே கருமம்அன்று அறிவாயே.

ஞானம் அனுபவ அறிவு ஆகும். பிறர் சொல்ல அவ்வாறே பாவிப்பது தியானத்தின் இயல்பு ஆகும். மற்றவர் அறிந்ததை. சொல்லியதை மறக்கக்கூடும் அனுபவத்தால்

உணர்ந்ததை மறப்பதில்லை. எனவே அனுபவ அறிவே உண்மையாகும். தியானிக்கப்படுவன பொய்யாகும். அஞ்ஞானத்தைச் சினந்து அதனை அழிப்பது விருத்தி கர்மங்கள் அல்ல என உணர்வாயாக.

84. சருவ முத்தியைத் தருகின்ற தியானமும்
சத்தியம் அன்றுஎன்றால்
சருவ முத்தியும் சத்தியம் அன்றுஎன்று
சங்கியா தேநீகேள்
உருவம் கேட்டவன் தியானிக்கும் பொழுதில்அவ்
உருவம்வாஸ் தவம்அன்றே
உருவம் ஆகும்அப் பொழுதுகண் ணால்கண்ட
உருவம்வாஸ் தவம்ஆமே

“சர்வமும் பிரம்மம்” என்ற தியானம் உண்மையன்று. சர்வ துக்க நிவர்த்தியான முத்தியும் உண்மையன்று என சந்தேகிக்காதே. பிரம்மவடிவத்தை உபதேசிக்க அறிந்தவன் அதனை தியானிக்கும் போது அது பாவனையாய் இருப்பதால் உண்மை அல்லவாம். அத் தியானத்தின் முதிர்ச்சியில் பிரத்தியட்சமாக அறிந்த பிரம்ம வடிவம் உண்மையாகும்.

85. சடமது ஆகிய தியானம்மெய் ஆகிய சர்வமுத் தியைநல்கும்
திடமது ஆனதுஎப் படிஎனில் அவர்அவர் தியானமே பிறப்புஆகும்
உடலம் ஆசையால் தியானிக்கில் தியானித்த உடல்கள்ஆ குவர்மைந்தா
தொடர்பவம்கெடச் சொருபமே தியானிக்கில் சொரும்ஆ குவர்மெய்யே

பொய்யான நிர்க்குண தியானம் உண்மையான முத்தியைத் தரும் மரண காலத்தில் தியானிக்கும் பாவனையை ஒத்தே மறு பிறவி அமையும் உடலை வேண்டித் தியானித்தால் விரும்பிய உடலைப் பெறுவர். பிரம்ம சொருபத்தை தியானித்தால் பிரம்ம சொருபமே ஆவார்கள். இது சத்தியமாகும்.

86. பிரம ரூபத்தை தியானித்த பேர்களும் பிரமம்ஆ குவர்என்றால்
நரச ரீரம்ஆம் குரவனே விசாரம்ஏன் ஞானம்ஏன் என்னாதே
பரம பாவனை பரோட்சம்ஆம் பின்புஅந்தப் பரோட்சமே அபரோட்சம்
திரவி சாரம்ஆம் ஞானம்ஆம் முத்திஆம் தீர்வைஈது அறிவாயே.

பிரம்ம சொரூபத்தை தியானித்தவர் எல்லாம் பிரம்மம் ஆகுவர். என்றால் விசாரம் எதற்கு ? அதன் பயனான ஞானம் எதற்கு? என்றால் பிரம்மத் தியானம் முதலில் பரோட்ச ஞானம் ஆகும். தியானம் திட்பட, திடப்பட. பிரத்தியட்ச ஞானமாகும். சுபரோட்சம், விசாரத் தெளிவால் கிடைப்பதால் உண்மை ஞானமும் மோட்சமும் ஆகும் என்பதை அறிவாயாக.

87. வீடுஅது ஆம்பரி பூரண சொரூபத்தில் விருத்திஞா னமும்கூடிச்
சேடம் ஆகினால் அகண்டம்ஆம் அனுபவ சித்திஎப் படிஎன்றால்
சாடி நீர்மண்ணைப் பிரித்ததேற் றாம்பொடி தானும்மண் ணொடுமாயும்
ஊடி ஞானமும் அறிவுஇலா மையைக்கெடுத்து ஒக்கவே கெடும்தானே.

முத்தி நிலை என்ற பிரம்ம சொரூபத்தில் அந்தக் கரண வடிவான விருத்தி ஞானம் கூடினால் அகண்ட பிரம்ம சொரூபன் என்ற அனுபவம் சித்திக்கும். குடத்து நீரில் உள்ள மாசு நீங்க சேர்த்த தேத்தாங் கொட்டை தூள் சேறுடன் கலந்து மறைவது போல் அஞ்ஞானத்தை கெடுத்த விருத்தி ஞானமும் அதனுடன் இணைந்து அழிந்து விடும்.

88. இந்த நிச்சய முத்தருள் அனுபவம்
இருப்பதுஎப் படி என்றால்
சிந்தை அற்றபூ மண்டலஇ ராசனும்
சிசுவும்போல் சுகம் ஆவர்
பந்த முத்திகள் மறந்துபோம் உண்டுஎன்று
பலர்சொலின் நகை ஆவர்
அந்த ரத்தைஉண்டு உமிழ்ந்ததுஓர் கொசுகுஎனும்
அவர்களை நகையாரோ.

திடமான அகண்ட அனுபவம் ஜீவன் முத்தரிடம் தன் நாட்டில் குறையேதும் இல்லை என்று இருக்கும் அரசர் போலவும். களங்க மற்ற குழந்தை போல ஆனந்த வடிவாய் இருப்பர். அஞ்ஞானத்தால் பந்தம். ஞானத்தால் தனக்கு மோட்சம் கிடைத்தது போன்ற நினைப்பு இன்றி இருப்பர். பந்தம், மோட்சம் உண்டு என்றால் அதை நம்பாது ஆகாயத்தை ஒரு கொசு விழுங்கிய பின் உமிழ்ந்தது என்று கூறுவதை நாம் கேட்டு சிரிப்பது போல் சிரிப்பார்கள்.

**89. மலடி மைந்தனும் தாணுவில் புருடனும் வான்மலர் முடிசூடி**
**இலகு கந்தர்ப்ப நகரிலே சுத்திகை இரசதம் விலைபேசிக்**
**கலகம் ஆய்முயல் கொம்பினால் குத்தியே களைத்துஇரு வரும்மாண்டார்**
**அலகை ஆயினார் எனும்விவ காரத்தை அறிந்தவன் மயங்கானே.**

மலடி மகன், கட்டையில் கள்வன், கந்தர்வ லோகத்தில் கிளிஞ்சல் வெள்ளி வாங்க விலைபேசி முயல் கொம்பால் குத்திக்கொண்டு, இறந்து போய் பேயாக மாறி அலைகிறார்கள். என்பதை கற்பனை என்று தெளிந்தவன் மயங்க மாட்டான். பிரம்மம் சத்யம், பிரபஞ்சம் பொய் என்பதை அறிந்து தெறிந்தவன் பொய்யான உலகத்தில் மயங்க மாட்டான்.

**90. மாயை என்பது பொய்எனில் அதுபெற்ற வகைஎலாம் பொய் ஆமே**
**தாயை அன்றிமக் களுக்குஒரு பிறவியும் சாதியும் வேறுஉண்டோ**
**சேய சொர்க்கமும் நரகமும் நன்மையும் தீமையும் பாராமல்**
**தூய சத்துச் சித்து ஆனந்த பூரண சொருபமாய் இருப்பாயே.**

தாயின் சாதிக்கு மாறாக குழந்தைக்கு வேறு சாதி இல்லாதது போல் மாயை என்பது பொய், மாயையில் தோன்றிய பிரபஞ்சம், ஈஸ்வரன், ஜீவன் யாவும் பொய்யே. சொர்க்கம், நரகம், நன்மை, தீமை. பாவம், புண்ணியம் எல்லாம் பொய்யாக உணர்ந்து தூய பரிபூரண சச்சிதானந்த வடிவாய் இருப்பாயாக.

**91. பங்க யாசனன் முதல்பல தேவரும் பார்உள பெரியோரும்**
**கங்கை ஆதியாம் தீர்த்தமும் தேசமும் காலமும் மறைநாலும்**

அங்கம் ஆறுமந் திரங்களும் தவங்களும் அசத்தியம் எனச்

சொன்னால்

எங்கள் நாயக னேஅத னால்குற்றம் இல்லையோ மொழியீரே.

பிரம்மன் முதலான தேவர்கள், புண்ணிய தீர்த்தங்கள், தலங்கள், விரதம், வேதம் ஆறு அங்கம், மந்திரம் தவம் எல்லாம் பொய் என கூறுவது குற்றம் ஆகுமா ? மேற்கண்ட உபாசனைகள் பத முத்தி தருவன என பத்தி காண்டம் கூறும். சுருதி கூறுவது பொய்யாகுமா ?

92. சொற்ப னம்தனில் கண்டதைப் பொய்என்று சொல்வது பிழையானால்

அற்ப மாயையில் தோன்றிய சகங்களை அசத்துஎனல் பிழைஆமே

சொற்ப னந்தனில் கண்டதைப் பொய்என்று சொல்லலாம் எனில்மைந்தா

அற்ப மாயையில் தோன்றிய சகம்எலாம் அசத்தியம் எனல்ஆமே.

சொப்பனத்தில் கண்ட பிரபஞ்சத்தைப் பொய் என்று விழித்த பின் கூறுவது எவ்வாறு குற்றமாகாதோ அதுபோல் அற்ப மாயையில் உண்டான பிரபஞ்சம் எல்லாம் பொய் எனக் கூறலாம். அஞ்ஞானிக்கு மட்டும் பிரபஞ்சம் உண்மையாகத் தோன்றும்.

93. பொய்யை மெய்என்ற மூடர்புண் ணியர்என்று புராணம்கவப்

பிடும்ஆனால்

மெய்யை மெய்என்ற ஞானிக்குக் குற்றங்கள் விதித்தசாத்

திரம்உண்டோ

பொய்யது ஏதுஎனில் நாமரூ பங்களாம் பூதம்ஆ கியமாயை

மெய்யது ஏதுஎனில் சச்சிதா னந்தமாய் வியாபிக்கும் ஆன்மாவே.

ஞான காண்டத்தில் பொய் என்று நீக்கப்பட்ட சொருபாதிகளை உண்மை என வழிபடுவோர் புண்ணியவான்கள் பிரம்மம் மட்டுமே சத்தியம் பஞ்ச பூதங்கள் மற்றும் நாம ரூபங்கள் ஆன பிரபஞ்சம் மாயை ஆகும். எங்கும் வியாபித்து இருப்பது ஆன்மாவே ஆகும்.

அஞ்ஞானம் நீங்கிய ஞானிக்கு எல்லாமே பிரம்ம சொருபமாகவே இருக்கும்.

94. மாயை என்பதுஏது உடையர்ஆர் எப்படி வந்தது வருவானேன்
மாயை என்பது பிரமத்தின் வேறுஎனின் வஸ்துவும் இரண்டுஆமே
மாயை என்பதும் பிரமமும் ஒன்றுஎனின் வஸ்துவும் பொய்ஆமே
மாயை என்றமே கங்களுக்கு ஒரு சண்ட மாருத குருமூர்த்தி.

மாயை எது ? அது எப்படி உற்பத்தியாகிறது ? மாயையை உடையவர் யார் ? அது எக்காரணத்தால் வந்தது ? மாயை பிரம்மத்திலும் வேறு எனில் அத்வைதம் சித்திக்காதே. மாலையும் பிரம்மமும் ஒன்று என்றால் பிரம்மமும் மாயையைப் போல் பொய் ஆகுமா ? மாயையை விளக்குங்கள் குருவே.

95. அதனை இன்னதுஎன்று உரைத்திடப் படாமையால்
அவாச்சிய வடிவுஆகும்
இதுத னக்குஉளது உடல்யான் உலகுமெய்
எனும் அவர் உடையோர்கள்
கதைஇ லாதபொய் வந்ததுஇப் படிஎன்று
கண்டபேர் இலைமைந்தா
விதன மாயைஏன் வந்ததுஎன் றால்புத்தி
விசாரம்அற் றதனாலே.

மாயையின் சொருபத்தை விளக்க முடியாது அது அவாச்சியம் ஆகும். சரீரமே நான் என்னுடையது என்ற அபிமானமும் உலகம் உண்மை என்ற மயக்கம். கொண்டோரே மாயை உடையவர்கள். மாயையை கண்டவர். ஒருவரும் இல்லை. புத்தி விசாரனை செய்யாததால் துன்பம் தரும் மாயை வந்தது.

96. அருவம் ஆகும்மா யாவிவித் தைகள்வினை யாடுமுன் தெரியாவே
உருவம் ஆம்பல கந்தர்ப்ப சேனையாய் உதித்தபின் வெளிஆகும்

பிரம சத்திகள் அநந்தம் ஆம் அதைக்கண்டு பிடித்திடல் சவடாதே
பரவு பூதங்கள் கண்டு அநு மானத்தால் பலருக்கும் வெளியாமே.

ஜாலக்காரனது வித்தைகள் அவன் விளையாடுமுன் தெரியாது. பற்பல உருவங்களாக தோன்றும் போது அனைவரும் காணலாம். பிரம்மத்தின் மாயா சக்திகள் அளவற்றன அவற்றை காண இயலாது. பஞ்ச பூதங்களைக் காண்பதால் பிரம்மத்திற்குச் சக்திகள் உண்டு என தீர்மானிக்கலாம்.

97. காரி யங்களும் சத்தி ஆதாரமும் காணும்மற்று அதுமாயம்
பாரில் நின்றமா யாவியும் சேனையும் பார்ப்பவர் கண்காணும்
வீரி யம்திகழ் வித்தைஆ யினசத்தி வெளிப்படா ததுபோலே
பேர்இ யல்பிர மத்துக்கும் உலகுக்கும் பிறிதுசத் திகள் உண்டே.

இந்திர ஜாலக்காரனும், அவன் தோற்றுவித்த கந்தர்வ சேனைக்கும் காண்போருக்கு பிரத்தியட்சமாக தோன்றும். அதனை உருவாக்கிய சக்தி தெரியாது அதுபோல் மாயா சக்தியின் காரியமாகிய நாமரூப உலகமும். ஆதாரமான பிம்பமும் பிரத்தியட்சமாகும். மாயா சக்தியின் புலப்படாது. ஆதாரமான பிரம்மத்திற்கும் அதன் காரியமாகிய பிரபஞ்சத்திற்கும் வேறாக அதிக சக்திகள் உள்ளன.

98. சத்தி சத்தனைத் தவிரவேறு அன்றுகாண் சத்தனாம் மாயாவி
வித்தை காட்டிய இந்திர சாலம்பொய் வித்துவான் மெய்போலப்
புத்தி மைந்தனே சத்திமான் ஆகிய பூரண ஆன்மாவின்
வத்து நிர்ணயம் சொன்னதிட் டாந்தத்தின் வழிகண்டு தெளிவாயே.

இந்திரஜாலம் பொய் ஆனால் இந்திர ஜாலக்காரன் மெய், அதுபோல் பரிபூரணமான ஆன்மா மெய் அதன் காரியமான பிரபஞ்சம் பொய் என்றும் பிரம்மத்தை நிச்சயம் செய்து தெளிவாயாக.

99. இல்லை ஆகிய சத்தியை உண்டுஎன்பது எப்படி எனக்கேட்கில்
புல்லை ஆதியாம் அசேதனப் பொருள்எலாம் பூத்துக்காய்ப் பனாராய்
நல்லை யாமக னே அதில் சிற்சித்தி நடந்திடாது இருந்தக்கால்
தொல்லை யாய்வரும் சராசர உயிர்க்குஎலாம் சுபாவங்கள் வேறுஆமே.

பிரம்மத்திற்கு சக்தி உண்டு எனக் கூறுவது புல் முதலிய அறிவற்ற பொருட்கள் எல்லாம் பூத்துக் காய்க்கின்றன. அப்பொருளில் பரம் பொருள் சக்தி இல்லாவிடில் அசையும், அசையா உயிர்களின் இயற்கை சுபாவம் மாறிவிடும்.

100. கருப்பை முட்டையுள் பறவைகள் பலநிறம் கலந்தசித் திரம்பாராய்
அருப்பாம் ஆம்சத்தி நியமம்இல் லாவிடில் அரசுஇலா நகர்போலாம்
நெருப்பு நீரதுஆம் கசப்புமே மதுரம்ஆம் நீசனும் மறைஓதும்
பொருப்பு மேகம்ஆம் கடல்எலாம் மண்களாம் புவனம்இப் படிப்போமே.

ஒரே நிறமுடைய முட்டையில் இருந்து பல நிற குஞ்சுகள் தோன்றுவது, உருவமற்ற அச்சக்திக்கு நயமம் உள்ளதால் தான் நியமம் இல்லை எனில் அரசன் அற்ற நகரம் சுடும்நெருப்பு குளிர்ந்த நீர்போல் மாறும். கசப்பான வேம்பு இனிக்கும். தகுதியற்றவன் வேதம் ஓதுவான். சலனமற்ற மலைகள் மேகம் போல் இடம் மாறும். கடல் எல்லாம் மண் மேடாகும். நியமசக்தி இல்லாவிடில் உலக சுபாவம் மேற்கண்டவாறு மாறும்.

101. ஆர்க்கும் காணவும் அறியவும் படாதுஎன்றும் அவாச்சிய
வடிவுஎன்றும்
சேர்க்கும் நாமரு பப்பயிர் வித்துஎன்றும் செப்பிய சிற்சத்தி
போர்க்கும் ஆறுஎங்ஙன் பிறித்திடப் படாதுஎனில் பிரமா வனைஒன்றாய்ப்
பார்க்கும் ஆறுஎங்ஙன் முத்திஆ குவதுஎங்ஙன் பரமசற் குருமூர்த்தி.

பிரம்ம சக்தியை புறத்தே காண இயலாது. அகத்தே அறிய இயலாது. அதனை விவரிக்க இயலாது என்றால் நாமரூப பிரபஞ்சத்திற்கு விதை என்றால் அதனை எவ்வாறு நீக்குவது ? நீக்க இயலாது என்றால் 'ஏகம் பிரம்மம்' என விசாரம் செய்வது எப்படி மோட்சம் எப்படி கிட்டும் ? இவற்றிற்கு விடையருள வேண்டும்.

102. வாயுத் தம்பனம் சலத்தம்ப னம்மணி மந்திர மருந்தாலே
தேயுத் தம்பனம் செய்திடில் அதில்அதில் சிறந்தசத் திகள்எங்கே
நீஅச் சச்சிதா னந்தமாய் வேறுஒன்று நினைந்திடாது இருப்பாயேல்
மாயச் சத்திபோம் ஈதுஅன்றி மந்திர மறைகளில் காணோமே.

மணி மந்திர மருந்துகளால் வாயு, நீர், தீ என்ற பூதங்களின் அசைவு, நெகழ்ச்சி உஷ்ணம், ஆகிய சக்திகளை நீக்குவது போல் நீயும் பிரபஞ்சத்தை நினையாது மாயைக்கு ஆதாரமான சச்சிதானந்தப் பிரம்மமாய் இருந்தால், மாயைச் சக்தி உன்னிடத்தில் இருந்து, தானே அழியும். நான் பிரம்ம சொருபன் என்னும் இந்த சிந்தனையைத் தவிர வேறு வழிகள் வேதத்தில் இல்லை.

103. மேவு மண்ணில் அவ்வியத்தமே வியத்தம்ஆம் விவகரித்திட வேண்டில்
நாவி னால்மண்ணைக் குடம்என்பர் அக்குடம் நசிப்பது நாவாலே
பாவும் நாமரூ பங்களை மறந்துமண் பார்ப்பதே பரமார்த்தம்
சீவ பேதகற் பிதங்களை மறந்துநீ சின்மயம் ஆவாயே.

மண்ணில் இருந்து உருவான குடம் உடைந்தால் மீண்டும் மண் ஆகிறது. இதில் குடம் என்ற பெயர் பொய். ஆனால் மண் மட்டும் மெய் என அறிவது போல் ஜீவன், ஈஸ்வரன், உலகம் என்ற கற்பனைப் பொய் என அறிந்து நீக்கி நீயும் அறிவே வடிவான பிரம்மமாக இருப்பாய்.

104. பூரிக் கும்கன சச்சிதா னந்தத்தில் பொய்சடம் துயர்மூன்றும்
தூரத்தது ஆயினும் தோன்றுபாழ் விபரிதம் துடைப்பதுஎப் படிஎன்றால்
நீரில் தோன்றும்தன் நிழல்தலை கீழதாய் நின்று அலை யினும்நேராய்ப்
பாரில் தோன்றிய தன்னைநோக் கிடில்அந்தப் பாழ்நிழல் பொய்ஆமே.

சச்சிதானந்த வடிவ பிரம்மத்திடம் அசத்து, சடம், துக்கம் என்ற மூன்றும் இல்லை. கரையில் நேராக நிற்பவனின் நிழல் நீரில் தலைகீழாகத் தெரியும் அதுபோல் நாமரூபமாக உலகம் தோன்றினாலும் அதன் ஆதாரமான சச்சிதானந்தமே மெய் என்று நிச்சயிப்பதால் நாமரூபங்கள் பொய்யாக நீங்கும்.

105. ஞானம் காரணம் அறிபொருள் காரிய நாமரூபப் பேய்கள்
ஆனது எப்படி அழிந்ததுஎப் படிஎன ஆய்குதல் பலன் அன்றே
மான மைந்தனே தீர்க்கசொப் பனசகம் வந்ததும் பாராமல்
போன தும்நினை யாமல்உன் போதம்ஆய்ப் பூர்ணமாய் இருப்பாயே.

அறிவு ஆகிய பொருள் காரணம் ஆகும். அறியப்படும் பொருள் காரியம் ஆகும். காரியமான நாமரூபங்களின் தோற்றத்தையும் அழிவையும் விசாரித்தால் பயன் இல்லை. பிரபஞ்சம் கனவிற்கு சமம். பிரபஞ்சத்தின் தோற்ற ஒடுக்கங்களை விசாரியாது உண்மை வடிவான ஆன்மாவாய் பரிபூரண பிரம்மமாய் இருப்பாயாக.

106. அசத்தில் எம்மட்டுஉண்டு அம்மட்டும் பராமுகம் ஆகினால் அம்மட்டும்
நிசத்தில் உள்விழிப் பார்வையாம் இப்படி நிரந்தரப் பழக்கத்தால்
வசத்தில் உன்மனம் நின்றுசின் மாத்திர வடிவம்ஆ யிடின்மைந்தா
கசத்த தேகத்தில் இருக்கினும் ஆனந்தக் கடல்வடிவு ஆவாயே.

பொய்யான உலகத்தின் மீது இருந்த அபிமானம் எந்த அளவிற்கு நீங்குமோ அந்த அளவிற்கு சத்தியப் பிரமத்தில் விழிப்பு ஏற்படும். இவ்வாறு நெடுங்காலம் அப்பியாசம் செய்தால் உன் மனது கட்டுபாட்டு நிலை பிறழாது இருந்தால் நீ சத்து வடிவாகிவிடுவாய் வெறுக்க தக்க சரீரத்தில் நீ இருந்தாலும் ஆனந்தக் கடல் வடிவாகி விடுவாய்.

107. தான்அன்றி வேறுஒன்றும் இல்லாத பூரணச்
சச்சிதா னந்தகுணம்ஆய்
ஊன்நின்ற உயிர்தோறும் ஒன்றுஆகும் என்றால்அஃது
ஒக்கின்ற படிகண்டிலேன்
நான் என்ற சீவன்கள் சத்துஆன வகைஒக்கும்
ஞானங்கள் வெளிகண்டதால்
ஆனந்தம் இதுபோல வெளிஆக உதியாத
அடைவுஏது குருநாதனே.

சச்சிதானந்த சுபாவமாய் ஒவ்வொரு உடலிலும் நான் என்று நிற்கும் ஜீவர்கள் தோறும் நான் இருத்தலால் சத்து உள்ளது. என்பதும் கண்டேன். கேட்டேன் என்பதால் அவர்களிடம் சித்து உள்ளது. என்பதும் வெளிப்படை. ஆனால் ஆனந்தம் வெளிப்படையாகத் தோன்றாத காரணம் யாது ?

108. உருவங்கள் இரதங்கள் பரிசங்கள் ஒருபூவில் ஒன்றுஆகும் என்றாலுமே
கரணங்கள் ஓர்ஒன்றில் ஓர்ஒன்று தெரியுங்க
ணக்குஅன்றிவாராதுகாண்
அருமந்த சச்சிதா நந்தச் சுபாவங்கள் ஆன்மாவின் வடிவுஆகிலும்
பிரபஞ்ச மயம்ஆம் விருத்திபே தத்தினால் பேதங்கள் ஆம்மைந்தனே.

பூவின் உருவம், சுவை, பரிசம் ஆகியவை வெவ்வேறு இந்திரியங்களால் அறியப்படும் ஒரே இந்திரியத்தால் அறியப்படுவது இல்லை. சச்சிதானத்தின் சுபாவங்கள் ஆன்மாவின் சொரூபம் ஆயினும் பிரபஞ்ச மயம் ஆகிய விருத்திகளின் பேதத்தால் மாறுபட்டு தோன்றும்.

109. தாமதம்இ ராசதம் சாத்துவிதம் முக்குணத் தால்வரும்வி ருத்திமூன்றுஆம்
ஆம்அவைகள் மூடமும் கோரமும் சாந்தமும் அபிதானம் ஆகும்மகனே
ஏமுறஇ ருக்கின்ற சச்சிதா னந்தங்கள் என்றுஎன்றும் ஒன்று ஆகிலும்
நாம்உ ரைக் கும்விருத் திப்பிரிவி னால்சொருப ஞானாதி பிரிவுஆகுமே.

சாத்விக தாமச இரசோத முக்குணங்களின் விருத்திகள் சாந்தம் மூடம், கோரம் என மூவகைப்படும். சச்சிதானந்தம் ஒன்று தான். மூவகை விருத்தி பேதத்தால் ஒரே ஆன்ம வடிவான சச்சிதானந்தம் பலவாக தோன்றும்.

110. சடம்ஆன மூடத்த ருக்கல்லு மண்களில் சத்துஒன்று மேதோன்றுமால்
விடம்ஆன காமாதி கோரத்தில் ஆனந்தம் விளையாது மற்றவைகளாம்
திடம்ஆன ஒழிவுஆதி சாந்தத்தி லேசச்சி தானந்தம் மூன்றும்வெளியாம்
மடம்ஆன மூடங்கள் கோரங்கள் விடுசாந்த மனம்ஆகில் ஆனந்தமே.

சடப்பொருள்களில் இருந்து சத்துமட்டுமே வெளிப்படும். சித்து, ஆனந்தம், வெளிப்படாது. காமம் முதலிய விருத்திகளில் ஆனந்தம் வெளிப்படாது. சத்து, சித்து மட்டும் வெளிப்படும். சத்துவ குணவிருத்திகளில் ஆனந்தம் வெளிப்படும். காம மயமான கோர விருத்தியும், அஞ்ஞான மயமாகிய மூட விருத்தியும் விட்டு சாந்த விருத்தி உண்டானால் ஆனந்தம் வெளிப்படும்.

111. இகம்ஆன குருநாத னேசச்சி தானந்தம் எனும்இலக்
கணம்அறிகிலேன்
அகலாத சத்துஆவது ஏதுசித்து ஆவதுஏது ஆனந்தம்
ஏதுஎன்றிடில்
மிகுகாலம் மூன்றும்கெ டாதுஇருப் பதுசத்து வேறுபாடு
அறிதல்சித்துஆம்
மகிழ்காமம் நுகர்போது சுகம்ஆகும் அநுபூதி வாழ்வுஎன்பது
ஆனந்தமே.

எக்காலத்தும் அழியாது இருப்பது சத்து இலட்சணம், ஜடமான பொருள்களின் வேறுபாடு பரித்து அறிவது சித்து இலட்சணம், விரும்பிய பொருள் கிடைத்து அனுபவிக்கும் போது உண்டாவது ஆத்மாவின் ஆனந்த இலட்சணம் ஆகும்.

112. நாசச்ச ரீரத்து இருக்கும் சரீரிதனை நால்வேத மாவாக்கியம்
நீசச்சி தாநந்தம் என்றிடினும் ஆசிரியர் நீபிரமம் ஆவைஎனினும்
மாசுஅற்ற சச்சிதா நந்தம்நான் என்னைஇவன் மன்னும்அநுபவம்எங்ஙனே
கோசப்பு ரங்களைஇ டித்துத்த கர்க்கும்மத குஞ்சரக் குருநாதனே.

அழியக்கூடிய சரீரத்தை அடைந்து அதில் அபிமானம் வைத்து உள்ளவனிடம் நான்கு வேதங்களின் மகா வாக்கியங்கள் நீயே சச்சிதானந்தம் என்று கூறினாலும். ‘நீ பிரம்மமே ஆவாய்’ என்று உபதேசித்தாலும் என் ஜீவன் குற்ற மற்ற பிரம்மானுபவம் அடைவது எவ்வாறு.

113. சென்மாந்த ரம்செய்த வினைகள்உடல் தரும்எனில்
செல்காலம் இவன்உண்டலோ
கன்மாநு பவநகர சொர்க்கம்எனில் வருகின்ற
காலத்தும் இவன்உண்டலோ
உன்மாத யாதனா உடல்கடவுள் உடல்மநுட
உடல்மாறி மாறிஅழியும்
தன்மாய உடல்கெடினும் இவன்இருப் பதுகொண்டு
சத்துஎன்பது ஒக்கும்மகனே.

கடந்த ஜென்மத்தின் வினைப் பயனால் பெற்ற இந்த உடம்பினால் நிகழ்காலத்தில் செய்யும் பாவ புண்ணியத்தால் நரக சொர்கத்தை அனுபவிப்பான் எதில்காலத்தில் நரகத்தில் துன்பத்தை அனுபவிக்க யாதனா சரீரமும் சொர்க்கத்தில் சுகத்தை அனுபவிக்க தேவ சரீரமும். இவை இரண்டையும் சேர்த்து அனுபவிக்க மனித உடலும் மாறி மாறி ஏற்படும். பொய்யான இந்த உடல்கள் அழிந்த பின்னும் சரியான இவன் முக்காலத்தும் அழியாது இருத்தலால் இவனை சத்து எனலாம்.

114. இருள்ஆக மூடும்சு ழுத்தியில் இராத்திரியில்
இரவிசுடர் அற்றபொழுது
மருளாமல் இருளையும் பொருளையும் தெரிகின்ற
வகைகொண்டு சித்துஆகுமே
பெருவாழ்வு மிக்கதா னேதன்னி டத்தினில்
பேராத பிரியம்அதனால்
அருகாத பிரியம்சு கத்தில்வரும் ஆதலால்
ஆனந்தம்ஆம் மைந்தனே.

சுழுத்தி நிலையில் அஞ்ஞான இருளையும் இரவு நேரத்தில் பொருளையும் மயங்காமல் அறிவதால் நாம் சித்து என்பது அனுபவம். தன்னிடம் பிரியம் இருப்பதாலும் சுகத்தினிடத்து பிரியம் பிரசித்து ஆவதாலும் ஆன்மா ஆனந்தம் என்பது அனுபவமாம்.

115\. அன்னபா னாதிசுக சாதனம்அது ஆகையால்
ஆர்க்கும்வெகு பிரியம்ஆகும்
இன்னவாறு ஆன்மாவும் ஆனந்த சாதனம்
எனக்கருதல் பொருள் அல்லவே
சொன்னஆன் மாவைஒரு சுகசாத னங்களொடு
சொல்லுவாய் ஆகில்மகனே
உன்னதுஆ னந்தம்வேறு ஏதுஅனுப விப்பதுஆர்
உபயஆன் மாவும்உளவோ.

சுகத்திற்கு சாதனமான அன்னம். பானத்தின் மீது எல்லோருக்கும் பிரியமுண்டு. ஆன்மா சுகம் அடைவதற்கான சாதனம் அன்று. ஆனந்த மயமான ஆன்மா ஒன்று அதனை அனுபவிக்கும் ஆன்மா என இருவேறு இல்லாததால் ஆன்மா ஆனந்த வடிவே அன்றி அதற்கு சாதனம் ஆகாது.

116\. விடயசுகம் அதில்வருதல் பிரியம்மாத் திரம்ஆகும்
வெகுபிரிய ஆன்மாவில்ஆம்
விடயசுகம் வருபிரியம் மாறிவரும் ஆனமாவில்
வெகுபிரியம் மாறாதுகாண்
விடயசுகம் விடலும்ஆம் கொளலும்ஆம் ஆன்மாவை
விடுவதுஎவர் கொள்வதுஎவர்யார்
விடயசுக போகங்கள் விடும்அவனை அவனால்
விடப்படாது ஒருநாளுமே.

விடயங்களால் வரும் சுகம் அற்பமாகும். அதுமாறி மாறிவருவதால் நிரந்தரமானது அல்ல ஆன்மாவில் ஏற்படும் பிரியதும் மாறுவதில்லை விடய சுகத்தை விடுதலும் பற்றுதலும் கூடும். ஆன்ம சுகத்தை விடுபவர் கொள்பவர் ஒருவரும் இலர். விடய ஆனந்தத்தை நீக்கும். அவனால் ஆன்மாவாகிய தன்னை நீக்க இயலாது.

117. வேகின்ற கோபங்க ளால்என்னை நான்கொன்று

விடுகிறேன் என்றுசிலபேர்

சாகின்ற படியினால் தன்னையே தான்கொன்று

சாவன்எனல் சங்கைஅலவே

தேகம்த னைக்கொல்லும் அவனால் விடப்பட்ட

தேகம்அவன் அன்றுமகனே

ஆகம்த னில்கோபம் அலதுதனை ஒருநாளும்

ஆன்மாவெ றுப்பதுஇலையே.

கோபத்தில் தன்னை வெறுத்து தற்கொலை செய்து சிலர் இறக்கின்றனர். அவர்கள் தனக்கு வேறான உடல் மீதுதான் கோபமே தவிர அவனிடத்தில் வெறுப்பு இல்லை ஆத்மா தன்னை வெறுப்பதில்லை.

118. தாகப்ப டும்பொருளி லும்மகன் பிரியமாம்

தனயனிலும் உடல்பிரியமாம்

ஆகத்தி லும்பிரியம் இந்திரியம் ஆம்கரணம்

அதனிலும் பிரியம்உயிர் ஆம்

ஏகப்பி ராணனிலும் வெகுபிரியம் ஆன்மாவில்

இந்தஆன் மாமுக்கியம்

ஊகத்தி னால்கௌணம் மித்தைகர்த் தாமூன்றும்

ஓர்ஒன்றில் அதிகம்மகனே.

செல்வம், மகன், சரீரம், இந்திரியம், காரணம், பிராணன், இவற்றை விட ஆன்மாவின் மீது பிரியம் அதிகம் எனவே ஆன்மா முக்கியமானது. கௌண ஆன்மா, மித்தை ஆன்மா, ஜீவன் ஆன்மா என மூவகைப்படும். அவற்றில் ஒன்றைவிட ஒன்று அதிகப் பிரியம் கொண்டது.

119. கெடல்ஆன பொழுதுஇவன் காணிக்கு மகன் ஆன
கெவுண ஆன் மாமுக்கியம்
விடலாத உடலம்ப ரிக்கும் நாள் உடல்ஆன
மித்தைஆன் மாமுக்கியம்
திடம்ஆன நன்மைகதி வேண்டினால் கர்த்தன்ஆம்
சீவஆன் மாமுக்கியம்
சடம்மாயும் முத்தியினில் ஞானஆன் மாஆனா
தானோம காமுக்கியம்.

இறக்கும் தருவாயில் தனது சொத்துக்களை மகனுக்கு கொடுப்பதால் கௌண ஆன்மா முக்கியமாகிறது. தூல சரீரத்துக்கு உணவு கொடுத்து பாதுகாப்பதால் மித்தை ஆன்மா முக்கியமாகிறது. தவம் செய்யும் போது ஜீவன் ஆன்மா முக்கியமாகிறது. தத்துவ விசாரம் செய்து அஞ்ஞானம் அழிந்த மோட்ச தசையில் ஞான ஆன்மாவான 'தான்' மிக முக்கியம்.

120. புலியும்அநு கூலம்எனில் இட்டமாம் பகைசெயில்
புதல்வன்எனி னும்வெறுப்புஆம்
உலகில்இரு வகையும்அல் லாதபுல் ஆதியில்
உதாசீனம் ஆம்ஆதலால்
மலினம்அறு சின்மயன் பலவகையும் இப்படி
மகிழ்ச்சியில் விருப்பம் இகழான்
அலகில் ஆனந்தவடிவு ஆகும்உன் சொரூபத்தை
ஆராய்ந்து பார்மைந்தனே.

ஒருவருக்கு உதவி செய்தால் கொடிய மிருகமாயினும் அதனிடம் பிரியமும் வேண்டாததை செய்தால் மகன் ஆயினும் வெறுப்பு உண்டாவதும் பயன்படாத புல் போன்றவற்றின் மீது அலட்சியமும் ஏற்படுகிறது. சின்மயமான ஆத்மா மாறுதல் அடையாது இருப்பதால் ஆனந்தமாக உள்ளான். அளவற்ற ஆனந்தமாய் உள்ள உனது நிஜ வடிவை ஆராய்ந்து அறிக.

121. மானம்சி றந்தகுரு நாதனே ஆனந்த
வகைகள்எத் தனைஎன்னிலோ
ஞானம்தி கழ்ந்தபிர மானந்தம் வாசனா
னந்தம்விட யானந்தம் என்று
ஆனந்தம் மூன்றுவிதம் எட்டுவகை என்பர்சிலர்
அவ்வைந்தும் இதில்அடக்கம்
ஆனந்த வகைசொலக் கேள்மைந் தனேஎட்டும்
இஃதுஇன்னது இன்னது எனவே.

பிரம்மானந்தம் வாசனாநந்தம், விடயானந்தம் என மூவகையான ஆனந்தம் எட்டு விதமாக பிரிந்து விளங்கும்.

122. போகத்தில் வருசுகம் விடயசுகம் நித்திரைப் போதுஉளது பிரமசுகமாம்
போகத்து அனந்தலில் சுகம்வா சனைச்சுகம் முழுப்பிரியம் ஆன்மசுகமாம்
யோகத்தில் உளதுமுக் கியசுகமும் உதாசீனம் உற்றசுக நிசசுகம் அதாம்
ஏகத்தை நோக்கல்அத் துவிதசுகம் வாக்கியம் எழுந்தசுகம் ஞானசுகமே.

விடயானந்தம் – விரும்பிய பொருளை அடைந்து அனுபவிக்கும் போது கிட்டுவது.

பிரம்மானந்தம் – தூக்கத்தில் சுயம் பிரகாசமாய் இருக்கும் போது கிட்டுவது.

வாசனானந்தம் – தூக்கம் நீங்கியதும் சுழுத்தியில் அனுபவித்த சுகத்தின் வாசனை இருப்பதால் கிட்டுவது.

ஆத்மானந்தம் – தன் மீதே பிரியம் வைப்பதால் கிட்டுவது.

முக்தியானந்தம் – சமாதி நிலையில் கிட்டுவது.

நிசானந்தம் – விருப்பு வெறுப்பு இல்லாதபோது கிட்டும் சுகம்.

அத்வைத ஆனந்தம் – பொய்யான உருவங்களை நீங்கி நிச்சயமான தன்னை உணரும் போது கிட்டுவது

வித்தியானந்தம் – வேத மகா வாக்கியத்தின் விசாரத்தால் கிட்டுவது.

123. இவ்வாறு உரைசெயும் சுகபே தங்களின்

இயல்பாம் அவைசொல மகனேகேள்

ஒவ்வா நனவினில் உழல்வான் இடர்கெட

உறங்கும் சயனம்அது உறுநேரம்

செவ்வா மனம்அக முகம்ஆம் அதில்ஒளிர் சித்தின்

சுகநிழல் சேருங்காண்

அவ்வாறு இவன்உள மகிழ்வுஆம் அனுபவம்

அதுதான் விஷய சுகானந்தம்.

உறங்கும் போது மனோ விருத்தி அதிகரித்து பிரகாசமான ஆத்மா பிரதிபிம்பிக்கும் அப்போது ஏற்படும் அனுபவம் விடயானந்தம். விரும்பிய பொருளை அனுபவிக்கும் போது மனோவிருத்தி அகமுகமாகுதல் விடயானந்த இயல்பு விடயானந்தம் இழிவானது.

124. ஈனம் தருசுக விடயம் திரிபுடி இடர்ஆம் எனமனம் அசையாமல்

சேனம் தனதுகு லாயம் தனில்விழு செயல்போல்நித்திரை செறிசீவன்

தான்அந்தம்இல் பரனுடன் ஒன்றுவன்ஒருதனைஅல்லதுபிறநினையாமல்

ஆனந் தமயனும் ஆவன் சுகம்மிகும் அதுதான் உயர்பிர மானந்தம்.

ஆகாயத்தில் பறந்து களைத்த பருந்து இளைப்பாறி சுகம்பெற தனது கூட்டில் வீழ்வது போல், தன்னைப்பற்றி இருவேறு நினைவு இன்றி சுழுத்தியில் அனுபவிப்பது பிரம்மானந்த இயல்பு

125. தூங்கும் சுகம்அது பிரமச் சுகம்எனல்

சுருதிப் பொருள்வழி துயில்வோர்கள்

தாங்கும் மலர் அணை நன்றுஆ கச்சிலர்

சம்பா திப்பது தான்உலகம்

தீங்கும் நன்மையும் ஆண்பெண் முறைமையும்

தெரியாது அமலிசெய் பொழுதேபோல்
ஆங்குஉள் வெளிகளும் அறியா அனுபவம்
அதனால் அதுபிர மானந்தம்.

இடையூறு இல்லாத தூக்கதிலும், சுழுத்தியிலும் ஆனந்தம் உண்டு என்பது உத்தியாகும். அகம், புறமற்ற சுழுத்தி நிலையில் ஆனந்தம் அனுபவிப்பது பிரம்மானந்தம்.

126. உதவும் புவியினில் ஒருவன் அனுபவம்
ஒருவன் மனதினில் உதியாதே
மதியும் கெடுகிற துயில்கொண்டு ஆனந்த
மயன்அன் றோசுகம் உறுகின்றான்
இதுவிஞ் ஞான மயன்ஆம் சிந்தையில்
நினைவாய் வந்திடல் அழகுஅன்றே
சுதைவிண் ணோர்புகழ் குருவே நீர்இது
சொல்லீர் சகலமும் வல்லீரே.

தூக்கத்தில் ஆனந்த மயன் அனுபவித்த ஆனந்தத்தை விழிப்பு நிலையில் உள்ள விஞ்ஞான மய ஜீவனுக்கு எவ்வாறு தோன்றும் ?

127. நெய்யும் வெண்ணையும் இருபேர் களும்அறி
நினைவில் பிறிவுஅறி வினில் இல்லை
செய்யும் நனவினில் இறுகும் மனத்தொடு
சேரும் சின்மய விஞ்ஞானன்
நையும் துயர்மனம் நழுவும் பொழுது உணர்
ஞானச் சுகம்உனும் ஆனந்தன்
பெய்யும் துளிகளும் நீரும் குளமொடு
பாகும் போல்இவர் பிறிவு அன்றே.

ஆனந்த மயன். விஞ்ஞான மயன், என பெயர் தான் வேறுபாடே தவிர இரண்டிலும் உள்ள அறிவு ஒன்றே ஆகும் விழிப்பு நிலையில் மனதோடு கூடியுள்ள விஞ்ஞான மயன் தூக்கத்தில் மனம் ஒடுங்கிய ஆனந்த மயன் ஆவான். எனவே ஆனந்த மயனின் அனுபவம் விஞ்ஞான மயனுக்கு தோன்றும்.

128. ஒன்றுஆ கியபிர மானந் தச்சுகம்

ஒழிவான் ஏன்வெளி வருவான்ஏன்

என்றால் முன்செய்த கருமம் வெளியினில்

இழுக்கும் சுழுத்திவிட்டு எழுந்தோனும்

நன்றுஆ யின்சுகம் அகலான் வெளியிலும்

நடவான் மறதியும் பெறமாட்டான்

அன்றாம் எனஇருந்து உறங்கும் சிலகணம்

அதுவே வாதனை ஆனந்தம்.

ஜீவனின் முன் வினைப்பயனால் ஆனந்த மயன் உறக்கத்தில் அனுபவித்த சுகத்தை விழிப்பு நிலையடைந்த சிறிது நேரம் வரை பிரம்மானந்த அனுபவம் நீங்காது இருப்பான். சுழுத்தி சாக்கிரம் இரண்டிற்கும் இடைப்பட்ட சிறிது நேர உறக்கத்தில் தோன்றுவது வாசனானந்தம் ஆகும்.

129. அந்தக் கணம்உடல் அகம் என்று இடர்களில்

அலைந்தே சுகம்தனை மறந்தேபோம்

முந்தைச் செயும்வினை சுகதுக் கம்தரும்

மோனம் உறுநடு வடிவில்காண்

எந்தப் புருடனும் ஒருசிந் தையும்அற

இருந்தேன் எனல்அநு பவம்ஆகும்

இந்தப் படிதன்உ தாசீ னச்சுகம்

இதுவே நிசம்எனும் ஆனந்தம்.

விழிப்பு நிலை ஏற்பட்ட உடன் தான் உடல் என்ற முன் அனுபவித்த ஆனந்தம் மறந்து சுக துக்கங்களை அனுபவிப்பான் விருப்பு, வெறுப்பு, அற்ற நிலையில் "நான் ஒரு சிந்தனை இன்றிச் சும்மா இருந்தேன்". எனக் கூறுவது அனுபவம், உதாசீன காலத்துத் தோன்றும் ஆனந்தம் நிசானந்தம் ஆகும்.

130. நிசம்ஆ னதுமுக் கியமோ குடத்துஉள நீர்அன் றேவெளி ஈரம்தான்

வசமா அகங்கரம் மறைந்தால் நிசம்அது படிந்தால் முக்கிய வகை ஆகும்

திசையார் திரிசயம் அறியா தேதுயில் செறியா தேஉடல் தறிபோலே

அசையா தேமதி சமம்ஆ கியநிலை அதுதான் முக்கிய ஆனந்தம்.

அகங்காரம் லயமாகி எல்லா திசைகளிலும் காண்பவைகளை மறந்து உடல் உறக்கநிலை அடையாமல் அசையாமல் இருக்க மனம் பிரம்மத்தில் நிலைத்து இருக்கும் போது தோன்றும் ஆனந்தம் முக்கியானந்தம் ஆகும்.

131. மனுடன் மனுடகந் தருவன் தேவநன்

மாகந் தருவன்ஒண் பிதிரோடே

பனும்ஆ ஜானர்கள் கருமத் தேவர்கள்

பகர்முக் கியர்இந் திரன்ஆசான்

கனம்ஆர் பிரஜா பதிஎன் விராட்டுபொன்

கர்ப்பப் பிரமன்என்று இன்னோர்கள்

பினஆ னந்தங்கள் நுரைஆம் பிரளய

வெள்ளக் கடல்பிர மானந்தம்.

மனிதன், அரசன், கந்தர்வன், தேவ கந்தர்வன், பிதிரர் ஆஜான தேவர், கருமத் தேவர், யமன், அக்னி, இந்திரன், குரு, விராட் புருடன் பிரமதேவன் இவர்கள் ஒருவரை விட ஒருவர் நூறு மடங்கு அதிகமாக அனுபவிக்கும் ஆனந்தம் சிறு நீர் துளி போன்றது. பிரம்மானந்தம் என்பது பிரளயக்கால பெருங்கடல் நீர் போல் அதிகமாகும்.

132. எவன்ஆ கிலும்இந்தத் துரியா தீதத்தில்

ஏழாம் பூமியில் இருந்தானேல்

அவன்நா ரதன்சுகன் சிவன்மால் அயன்முதல்

அறிவோர் அனுபவ சுகபோதம்

விவகார அதிர்சயம் இதுவே அனுபவம்

எனமுன் சொல்லிய விவகாரி

உவமா னமும்அறி மகனே அவன்அடி

உதிரும் பொடிகள்என் முடிமேலே.

துரியா தீதம் என்ற ஏழாம் பூமியில் உள்ளவர்கள் நாரதர், சுகன், சிவன், திருமால், பிரமன், ஆகியோருக்கு சமமான ஆனந்தத்தை பெறுவர். உலக விவகாரம் இல்லாமல் உறக்கம் இன்றி சச்சிதானந்த வடிவாய் இருக்கும் இந்நிலை முக்கிய நிசானந்தம் இந்த அனுபவத்தைப் பெற்றவர்களின் பாதத் துளிகள் என் முடிமேல் தரிக்க தக்கதாகும்.

133. இந்தவா றுஜந்து சுகம்சொல் லினோம்வித் தைசுகம்

இனிமேல் சொல்வோம்

முந்தமா யையும் சச்சி தானந்தப் பொருளுமே

மொழியும் போதில்

அந்தம்ஆம் அத்துவித சுகம்ஆன்ம சுகம்இ ரண்டும்

அங்கே சொன்னோம்

தொந்தம் மாற்றிய மகனே இன்னம்உனக்கு ஐயம்உண்டேல்

சொல்லு வாயே.

ஐந்து வகை ஆனந்தம் பற்றி அறிந்தாய் வித்யானந்தத்தில் இயல்பு பற்றி அறிவாயாக மாயையின் இயல்பு, சச்சிதானத்தின் அர்த்தம் பற்றி கூறிய போது வேதத்தின் முடிவான அத்வைதானந்தம், ஆன்மானந்தம், ஆகியவற்றின் இயல்புகளைச் கூறினோம்.

134. குகன்தனையும் எனையும்உல கினையும்ஈன்று அளித்து அருளும்
குருவே கேளீர்
புகன்றசச்சி தானந்தப் பதங்கள்தனித் தனிஆகிப்
பொருள்வேறு ஆனால்
உகண்டமனம் உறைப்பதுஎங்ஙன் பரியாய பதங்களைப்போல்
உறவு காணேன்
அகண்டம்ஆய் ஒருசுவையாய்த் தேனீக்கவட் டியமதுவா
அறிவிப் பீரே.

சுக, ஜீவ, பரம், என்ற மூன்றையும் காக்கும் குருவே, ஆன்ம வடிவம் சத்து, சித்து, ஆனந்தம் என்று கூறினீர்கள். இந்த மூன்றும் வெவ்வேறாகித் தம்முள் வேறுபடும் போது சஞ்சலப்படும் மனம் ஆன்ம சொருபத்தில் எவ்வாறு நீடித்து இருக்கும் ?

135. குளிர்இளகல் வெண்மைஎன்ற பதங்களினால் நீர்மூன்று
கூறுஆயிற்றோ
ஒளிதவனம் செம்மைஎன்ற பதங்களால் அக்கினியும்
ஒருமூன்று ஆமோ
வெளிமுதலாம் சகம்அசத்து மூடர்இடர் எனப்பிரித்து விலக்கி வேதம்
எளிதுஅறிய மூரண்மொழிந்த சத்துஆதி எனும்பிரமம் ஏகம் தானே.

குளிர்ச்சி, நெகிழ்ச்சி வெண்மை, என்ற குணங்களால் நீர் மூன்று பிரிவு ஆனதா? பிரகாசம், உஷ்ணம், சிவப்பு, என்றதால் தீ மூன்று ஆக பிரிந்துள்ளதா ? ஆகாசம் முதலான உலகத்தை அசத்து, ஜடம், துக்கம், என ஒதுக்கி விட்டு, ஆத்மாவை எளிதில் அறிய அசத்துக்கு மாறாக வேதம் சத்து, சித்து, ஆனந்தம் என்று கூறிய "பிரமம் ஒன்றே" ஆகும்.

136. நித்தியம்பூ ரணம்ஏகம் பரமார்த்தம் பரப்பிரமம்
நிதானம் சாந்தம்
சத்தியம்கே வலம்துரியம் சமம்திருக்கு சுவடஸ்தன்
சாட்சி போதம்
சுத்தம்இலக் கியம்சனா தனம்சீவன் தத்துவம்விண்
சோதி ஆன்மா
முத்தம்விபு சூக்குமம்என்று இவ்வண்ணம் விதிகுணங்கள்
மொழியும் வேதம்

உற்பத்தி இல்லாதது எங்கும் நிறைந்தது. சஜாதீய, விஜாதீய ஸ்வாகத பேதம், இல்லாதது, உண்மையானது. ஞான வடிவானது. நாம ரூபத்திற்கு அதிட்டானமானது. எப்போதும் ஒரே தன்மை உடையது. காரிய காரணம் இல்லாதது, மோட்ச வடிவானது, மூன்று அவத்தைகளுக்கு சாட்சி, விவகாரம் இல்லாதது. திருசியம் அறிவது, விகாரமடையாதது சர்வ பதார்த்தம் அறிவது, அறிவு வடிவானது, அசுத்தம் இல்லாதது, எப்போதும் ஒரே வடிவாக உள்ளது. சுயம் பிரகாச மானது. அன்னியமற்ற ஆனந்த வடிவம் பந்தம்,. கால தேசம் கடந்து காண்பதற்கு அரிதானது என அத்மாவின் விதி குணங்களை வேதம் கூறுகிறது.

137. அசலம்நிரஞ் சனம்அமிர்தம் அப்பிரமே யம்விமலம் வசனா தீதம்
அசடம்அநா மயம்அசங்கம் அதுலம்நிரந் தரம்அகோ சரம்அ கண்டம்
அசம்அநந்தம் அவிநாசி நிர்க்குணம்நிட் களம்நிரவ யவம்அ நாதி
அசரீரம் அவிகாரம் அத்துவிதம் எனவிலக்குஆம் அநேகம் உண்டே.

சலனம் அற்றது, சுபாவம் அற்றது. மரணம் அற்றது. கண்ணால் காணாதது மலம் அற்றது வாக்கிற்கு எட்டாதது. சடம் ஆகாதது, நோய் கவலை அற்றது. இடைவெளி அற்றது கண்டம் அற்றது, பிறப்பு, அற்றது. முடிவு அற்றது, நாசமற்றது, குணம் அற்றது, உருவம் இல்லாதது, அவயம் இல்லாதது, உற்பத்தி இல்லாதது, உடல் இல்லாதது. ஆறுவகை விகாரம் இல்லாதது, துவிதம் இல்லாதது என அளவற்ற விலக்கு நாமங்கள் பிரம்மத்திற்கு உண்டு.

138. இன்னவகை விதிவிலக்குக் குணங்கள் நன்றாய்ச்

சேர்ந்துஒருமித்து எல்லாம் கூடிச்

சொன்னபொருள் ஒன்றுஅன்றி இரண்டுஇல்லை

ஒருபொருளைச் சொல்லும் சொற்கள்

பின்னபதம் ஆம்அதனால் சத்துஆதி

குணப்பொருள் ஆம் பிரமம் ஏகம்

அன்னபொருள் ஒருமைஅறிந்து அகண்டபரி

பூரணம்ஆய் ஆவாய் நீயே.

விதி குணங்கள், விலக்கு குணங்கள், ஒன்று சேர்ந்து ஒருமித்த பொருள் ஒன்றே ஒன்றேயான பிரம்மத்தை கூறும் வேறுபட்ட பதங்களை ஆகும். சத்து, சித்து, ஆனந்தம், ஆன பிரம்மம், ஒன்றே ஆகும். ஒன்றாக இருக்கும் தன்மையை நீ உணர்ந்து அகண்ட பரிபூரணமாய் இருப்பாயாக.

139. நிர்க்குணவத் துவின்குணங்கள் உரைப்பதுதாய்

மலடிஎனல் நிகர்என் னாதே

சற்குணனே வத்துநிலை உரையாமல்

அறியவல்ல சதுரர் உண்டோ

நற்குணவே தங்கள்இந்தச் சீவன்முத்தி

பெறப்பிரம ஞானம் தோன்றச்

சொற்குணங்கள் பிரமத்தின் குணங்கள் அன்று

பிரமம்ஆம் சொரூபம் தானே.

குணமற்ற பிரம்மத்திற்கு வேதமானது குணங்களைக் கூறியது ‘என் தாய் மலடி’ என்று முன்னுக்குப் பின் முரணானது அல்ல. ஒரு பொருளை அறிய விரும்பியவர் அப்பொருளின் குணங்களை தானே அறியும்.விவேகி ஒருவரும் இலர் வேதத்தில் ஜீவன் முத்திசுகம் பிரம்ம ஞானம் பெற சொல்லப்பட்ட குணங்கள் பிரம்மத்தின் குணங்கள் அல்ல அவைபிரம்மத்தின் வடிவமே யாகும்.

140. மோகஇருள் கெடக்கோடி அருணன்என வருகுருவே மொழியக் கேளீர்

ஏகபரி பூரணம்ஆம் என்சொரூபம் என்உளத்தில் இறுகும் வண்ணம்

ஆகமங்கள் சொன்னபடி என்னைஅகண் டார்த்தமா அறிந்தேன் ஐயா

ஊகம்ஒத் திடஉரைத்தால் பசுமரத்தில் ஆணிபோல் உறைக்கும் நெஞ்சே.

ஒன்றாயும், பரிபூரணமாயும் உள்ள என் நிச வடிவம் சுருதிகள் கூறியபடி என்மனதில் உறுதியாகும் படி அகண்ட அறிவு ஆனந்த வடிவாய் அறிந்தேன் சச்சிதானந்தம் ஏகமே என்பதை என் உள்ளத்தில் பதிய உத்தியுடன் கூறினால் நான் தெளிவடைவேன்.

141. சத்தேசித்து ஆகும்அயல் எனில் அசத்தாம் அசத்துஆனால் சாட்சி எங்கே

சித்தேசத்து ஆகும்அயல் எனில்சடம்ஆம் சடங்களுக்குத் திதியும் இல்லை

ஒத்தேதோன் றியசத்தும் சித்தும்நல்ல சுகம்ஆகும் ஊகத் துக்குஓர்

வித்தேஅன் னியம்ஆகில் சடம்அசத்துஆம் சுகானுபவம் விளைந்தி டாதே.

தம்முள் ஒத்து இருக்கும் சத்தும், சித்தும், எதுவோ, அதுவே ஆனந்தம். சத்திற்கும், சித்திற்கும் வேறுபட்டது ஆனந்தம் என்றால் ஆனந்தம் ஜடமும் அசத்தும் ஆகிவிடும். அப்போது ஆனந்த அனுபவம் கிட்டாது. சத்து, சித்து, ஆனந்த வடிவாகிய பிரம்மம் ஒன்றே என ஊகிப்பதற்கு இதுவே சிறந்த உத்தியாகும்.

142. வீயாத சத்துமுன்னம் விளங்குவது தன்னாலோ வேறுஒன் றாலோ

வாயால்வேறு எனில்அதுவும் அசத்தோசத் தோஅசத்தேல் மலடி மைந்தன்

பேயோ காரியம்செயுமோ சத்துஎனஇப் படிஅதையும் பிரித்துச் சொன்னால்

ஓயாத அவத்தைஆம் குதர்க்கவிகற் பங்களை விட்டு ஒழிந்தி டாயே.

முக்காலத்தும் மாறுதல் அடையாது சத்து என்பதை அசத்தால் விளக்க முடியாது. அதனை விளக்குவது மற்றொரு சத்து என்றால் அநவஸ்தா தோஷம் ஏற்படாது. எனவே அதுவும் தகாதது.

143. சுருதியுத்தி ஒத்ததுபோல் அனுபவமும் கேள்சுழுத்திச் சுகஆ னந்தம்

மிருதிவடிவு ஆதலால்இவ் ஆனந்தமே அறிவுஆம் வேறுஅங்கு இல்லை

கருதுபிர ளயம்சுழுத்தி இரண்டிலும்நீ இருந்துஇருளைக் காண்கின் றாயே

இருதயத்துஇப் படிநோக்கி ஏகபரி பூரணமாய் இருந்தி டாயே.

சுருதி வாயிலாகவும், யுக்தி வாயிலாகவும், சத்து, சித்து, ஆனந்த பதங்கள் ஒன்றே. அதுவே பிரம்மம் ஆகும். உறக்கத்தில் அனுபவித்த ஆனந்தத்தை அப்போதே அறியாது. விழித்த பின் நினைத்து அறிவதே அறிவாகும். பிரளயம்,சுழுத்தி ஆகிய இரண்டு அவத்தைகளில் ஆனந்த வடிவமாகிய நீ இருந்தே அஞ்ஞான இருளை அறிந்து உன் நிச வடிவம், சத்து, சித்து ஆனந்தம் என்பதை புத்தியால் அறிந்து பரிபூரண சச்சிதானந்த வடிவமாய் இருப்பாயாக.

144. பலகலையும் உணர்ந்தகுரு மொழிந்தபடி இவனும்அனு பவம்வி டாமல்

பலமலரின் மதுப்போலே சச்சிதா னந்தம்ஒன்றாம் பரமார்த் தத்தைப்

பலபொழுதும் கண்மூடிச் சமாதிஇருந் தான்விழித்துப் பார்த்த போது

பலவடிவுஆம் சராசரசித் திரங்கள்எலாம் தோன்றும்ஒரு படம்ஆ னானே.

சச்சிதானத்தின் உண்மை நிலையை சுருதி, யுக்தி, அனுபவத்தோடு, அறிந்து கண்மூடிச் சமாதி நிலையில் இருந்து பின் விழித்த போது சர, அசரங்களின் சித்திரங்கள் அகண்ட சச்சிதானந்தப் பிரம்மமாகத் தோன்றும் வஸ்திரம் போலானார்.

145. இதயம்ஒத்த சற்குருவே நமக்குஇதுவே விநோதம்அன்றி

இனிவேறு உண்டோ

அதைஉரைத்தும் அதைநினைத்தும் இருப்பதுஅன்றோ

ஞானிகளுக்கு ஆன நீதி

முதல்உரைத்த துரியாதீ தமும்ஏழாம் பூமியும்முக்

கியம்ஆம் என்ற

பதமும்அதின் வகையும்எனக்கு எளிதுஆகத் தெளியும்வண்ணம்

பணித்தி டீரே.

பிரம்மத்தை உணர்ந்து இருப்பது ஆனந்தம். பிரம்மத்தை அடையும் வழியை உபதேசித்தும், சிந்தித்தும் இருப்பது ஞானிகளுக்கு உரிய நீதியாகும். முக்கியமான துரியா தீதமும். ஏழாம் பூமியும் பற்றி விளக்க வேண்டும்.

146. வினவும்இடத்து அஞ்ஞான பூமிகள்ஏழ் ஞானபூ மிகழ்ஏழ் என்பார்
இனிஅவற்றுள் அஞ்ஞான பூமிகள்ஏ ழையும்முந்தி இயம்பக் கேளாய்
தனிவித்துச் சாக்கிரம்சாக் கிரமகா சாக்கிரம்சாக் கிரத்தைச் சார்ந்த
கனவுகனைக் கனவுசாக் கிரம்சுழுத்தி என்றுஎழுபேர் கணித்தார் மேலோர்.

அஞ்ஞான பூமி ஏழு, ஞான பூமிகள் ஏழு ஆகும். 1.கலப்பற்ற பீஜ சாக்கிரம், 2.சாக்கிரம் 3.மகா சாக்கிரம் 4. சாக்கிரத்தில் சொப்பனம், 5.சொப்பனம் 6.சொப்பனத்தில் சாக்கிரம் 7.சுழுத்தி என்பன அஞ்ஞான பூமி ஏழாகும்.

147. முந்தஅகண் டத்துஎழும்ஓர் அறிவுமாத் திரம்அதுதான் முதல்வித்து ஆகும்
இந்தஅறி வில்பண்டுஇல் லாதஅகந்தை முளைபோல் ஆம் இதுந னவாம்
வந்துவந்து பிறவிதொறும் அகமமதை வளரும்அது மகாந னவாம்
நந்தும்அகம் கொடுநனவில் மனோராச்சி யம்செயலே நனாக்க னாவே.

சிதாபாசனோடு கூடிய அறிவு பீஜ சாக்கிரம். நான் என்ற அகங்காரம் சூட்சுமாக உண்டாகும் நிலை சாக்கிரமாம். அகங்காரம் திடப்பட்டும், விரிவாகவும் வளர்ந்த நிலை மகா சாக்கிரமாம். அறிந்ததை நினைவுபடுத்தியும், அறியாததை கற்பனை செய்து வீணான எண்ணங்களுக்கு இடமளித்தல் சாக்கிர சொப்பனம் ஆகும்.

148. உண்டுஉறங்கிமனோராச்சி யம்செயல்சொப் பனம்எனும்பேர்
உடையது ஆகும்
பண்டுகனாக் கண்டுமறந் ததைமீண்டும் நினைப்பதுசொப்
பனந னவாம்

மண்டும்இருள் மூடுவது சுழுத்திஆம் அஞ்ஞான

வகைகள் சொன்னோம்

விண்டுநிறை முத்திதரும் ஞானபூ மிகள்ஏழும்

விளம்பக் கேளாய்.

உண்டு உறங்கும் போது கனவு காண்பது சொப்பனம். சொப்பனத்தில் கண்டு மறந்ததை நினைவு கூர்ந்து சாக்கிரத்தில் நினைப்பது சொப்பன சாக்கிரமாகும். அஞ்ஞான இருளில் சூழ்ந்த ஆழ்ந்த உறக்கமே சுழுத்தியாகும். இவை ஏழும் அஞ்ஞான பூமிகள் ஆகும்.

149. புலவர்புகழ் முதற்பூமி சுபேச்சைவிசா ரணைஇரண்டும்ஆம்

பூமி ஆகும்

நலதனுமா னசிமூன்றாம் பூமிசத்து வாபத்தி

நாலாம் பூமி

சொலும்அசம்சத் திப்பேரும் பதார்த்தபா வனைப்பேரும்

தூரியப் பேரும்

மலினம்அறு மகனேஐந்து ஆறுஏழு பூமிகளா

வகுத்தார் மேலோர்.

1.சுபேச்சை 2.விசாரணை 3.தனுமானசி 4.சத்துவாபத்தி 5.அசம் சத்தி 6.பதார்த்த பாவனை 7.தூரியம் என்ற ஏழும் ஞான பூமிகள் ஆகும்.

150. துற்சங்க நிவிர்த்திவந்து சிவஞானம் விரும்புவது சுபேச்சை ஆகும்

நற்சங்க மொழிவினவி ஞானநூல் பழகல்விசா ரணையா நம்பி

முற்சங்க ஏடணைகள் விடல்தனுமா னசிஇந்த மூன்றி னாலும்

சற்சங்க மனதில் உண்மை அறிவுஉதித்தல் சத்துவா பத்தி தானே.

பிரம்ம ஞானத்தை அடைய விரும்பும் தீவிர இச்சை சுபேட்சை ஆகும். ஞான சாஸ்திரங்கள் கேட்டு திடமாதற் பொருட்டு மனனம் செய்தல் விசாரணையாகும். குரு சாஸ்திர அறிவுரைப்படி பந்தம் நீக்கி செல்வம் மீதான இச்சை நீக்குதல் தனுமானசி ஆகும். அநான்ம வாசனை நீங்கிய மனத்தில் தன் நிசவடிவம் பிரம்மமே என்பது சத்துவாபத்தியாகும்.

151. தத்துவத்தில் மனம் உறைத்து மித்தை எனும் மறத்தல் அசம்சக்தி ஆகும்
அத்துவிதஆ னந்தம் வரும் திரிபுடிபோம் பதார்த்தாபா வனைஅ தாகும்
வத்துநிலை இருந்தபடி இருந்தமவு னசுபாவம் துரியம் ஆகும்.
இத்துரிய பூமியைமுன் துரியாதீ தப்பதம் என்ற அதுவும் கேளாய்.

ஜீவ பிரம்ம ஐக்கியத்தில் மனம் அழுந்தி பொய்யான நாமரூபங்களை நீக்குதல் அசம் சத்தி ஆகும். அப்பியாச மிகுதியால் திரிபுடிகள் அற்று அத்து விதானந்தம் மேலிட்டு இருத்தல் பதார்த்த பாவனை ஆகும். ஆன்ம சொருபத்தில் நீடித்து நிலைத்த மௌன நிலை - துரியமாகும். இந்த ஏழும் ஞான பூமிகள் ஆகும்.

152. முற்புவிமுன் றினும்உலகம் தோன்றுதலால் சாக்கிரம்ஆம் மூன்றற்கு அப்பால்
சொற்பனம்ஆம் அதுவும்மெள்ள நழுவும்ஐந்துஆம் பூமியே சுழுத்தி ஆகும்
அற்புதம்ஆம் சுகானுபவம் மிகும்ஆறுஆம் புவிதுரியம் அதற்குஅப் பால்ஓர்
கற்பனைஇ லாதஇடம் அதீதம்என்று மௌனமாக் காட்டும் வேதம்.

சுபேச்சை முதலான மூன்று பூமிகளில் உள்ளவர்களுக்கு உலகம் சத்தியமாக தோன்றுவதால் இம்மூன்றும் சாக்கிர அவத்தையாம். சத்துவாபத்தியில் உலகம் சொப்பனம் போல் பொய்யாகத் தோன்றுவதால் இது சொப்பன அவத்தையாம். நாம ரூபங்கள் கிரமமாக நீங்கி எதுவும் தோன்றாத பூமி சுழுத்தியாகும். ஆனந்த அனுபவம் மிகுந்து உண்டானது. பதார்த்த பாவனை யாகும். இந்த நிலை மூன்று அவத்தைகளினின்று வேறுபட்டது. இந்த

அற்புத நிலை துரியமாகும். சத்து,அசத்து, என்ற கற்பனைகள் இல்லாத அதீதநிலை ஏழாம் பூமியாகிய துரியாத்தீதமாகும். என வேதம் மௌனமாக தெரிவிக்கிறது.

153. துரியநிலம் தனைத்துரியா தீதம்எனின் மயக்கம்என்று கருதி மேலோர்
அரியதுஒரு விதேகமுத்தி அதீதம்என்பார் அதுகணக்கில் ஆறாம் பூமி
மருவுசுழுத் தியில்காட்சி சுழுத்திஎன்பார் என்பதுநீ மனத்தில் கொள்ளாய்
பெருமைதரு ஞானபூ மியின்விகற்பம் இன்னம்உண்டு பேசக் கேளாய்

அரிதான விதேக முத்தியைத் துரியாத்தீதம் என்றனர். சுழுத்தி நிலையை இரண்டாக பிரித்து ஆழ்ந்து உறங்காத நிலை என்றும் ஆழ்ந்த உறக்க நிலை என்றும் கூறுவர். இதன் பிரகாரம் ஏழாம் நிலையைத் துரியாத்தீதம் எனக் கூறாது துரியம் என்றனர்.

154. முன்நிலங்கள் ஏறியமூ வரும்அப் பியாசிகள்ஆம் முத்தர் அல்லர்
பின்நிலங்கள் வரன்வரியான் வரிட்டன் எனும் சீவன்முத்தர் பேதம் ஆகும்
சொன்னநடுப் பூமிவந்த ஞானிகளே பிரமவித்துஆம் தூய முத்தர்
இன்னமும்அப் பூமிகளின் பெருமைதனை நீஅறிய யான்சொல் வேனே.

சுபேச்சை விசாரணை தனுமானசி ஆகிய மூன்றுபூமிகளை அடைந்தோர் அப்பியாசிகள் ஆவர். அவர்கள் ஜீவன் முத்தர்கள் அல்லர். அசம்சத்தி, பதார்த்த பாவனை, துரியம் அடைந்தோர், முறையே வரன், வரியான்,வரிட்டன் எனப்பட்டனர். சத்துவா பத்தியை அடைந்த ஞானிகளே பிரம்ம வித்தாகிய தூய முத்தர் எனப்படுவர்.

155. நாலாம்பூ மியில்வருமுன் மூன்றுபூ மியும்அடைந்து நடந்து மாண்டோர்
மேலான பதம்அடைந்து பிறந்துமெள்ள மெள்ளவந்து வீடு சேர்வார்
மாலான பவத்தில்விழார் முதற்பூமி கிடைப்பதுவே வருத்தம் மைந்தா
காலான முதற்பூமி கைவந்தால் முத்தியும்கை வந்தது ஆமே.

சுபேச்சை, விசாரணை, தனுமானசி என்ற பூமிகளை அப்பியாசித்து இறந்தோர் சுவர்க போகங்களை அனுபவித்து மீண்டும் பிறந்து மோட்சம் அடைவர். சுபேட்சை எனும் முதல் பூமியை அடைவதே மிகவும் அரிது. முதல் பூமி சித்திக்குமாயின் அவன் முக்தி கைவரப் பெற்றவன் ஆவார்.

156. இப்புவியில் இஞ்ஞான பூமிஒன்றில் இரண்டில்அடைந்து இருந்தார் ஆனால்
அப்புருடர் மிலேச்சர்ஆ கிலும்முத்தர் குருபாதத்து ஆணை மெய்யே
தப்புஉரை என் றவர்கெடுவார் நடுவான மறைகளைநீ சங்கி யாதே
செப்புமொழி வழிதிடமாய் அகம்பிரமம் என்றுஇருந்து தெளிந்தி டாயே.

சுபேச்சை, விசாரணை ஆகிய பூமிகளை அப்பியாசம் செய்தால் அவர் உலகில் கொடிய மற்றும் தாழ்ந்த நிலையில் இருந்தாலும் கூட ஜீவன் முக்தர் ஆவார். என்பது சத்தியம் இதனை தவறு என்பவர் கேடு அடைவர். சுருதிவாக்கியங்களை சந்தேகங் கொள்ளாது உறுதியுடன் ‘நான் பிரம்மம்’ என சிந்தித்து தெளிவு பெறுவாயாக.

157. பொல்லாத மிலேச்சருக்கும் விதேகமுத்தி தருஞான பூமி என்று
நெல்ஆகி முளைக்கும் எனைத் தண்டுலம்ஆக் கியகுருவே நீர்சொன் னீரே
இல்லாளும் குடும்பம்விட்டுச் சந்நியா சம்புகுந்துஏ காங்கி ஆனோர்
அல்லாமல் முத்திபெறார் என்றுசிலர் சொலும்மயக்கம் அகற்று வீரே.

பிறந்து இருக்கும் தன்மை கொண்ட நெல் போல் இருந்த என்னை அரிசி போல் மறுபடி பிறவாமல் செய்த குருவே ! ஞான பூமியை அடைந்த மிலேச்சர் கூட முக்தி பெறுவர். சன்னியாசிகள் தவிர மற்றவர்கள் மோட்சம் அடைய மாட்டார்கள் என்று கூறுவதை விளக்குவீர்களாக !

158. சிட்டர்புகழ் மகனேநீ சங்கித்த சங்கைநன்று தெரியக் கேளாய்
கட்டுஅறும்துறவுநால்வகைஆகும் அவைகளுக்குஅங்கு ஆகும்பேர்கள்

பட்டதுயர் கெடும்குடீ சகம்வெகூ தகம்அஞ்சம் பரம அஞ்சம்

விட்டுஅகலும் துறவுக்கு விராகம்கா ரணம்அன்றி வேடம் அன்றே.

குடும்ப பந்தம் அழிய காரணமான சன்னியாசம் 4 வகையாகும் 1.குடீசகம், 2.வெகூதகம் 3.ஹம்ஸம் 4.பரமஹம்ஸம் என்பன அவைகள். இந்த 4 வகை சன்னியாசத்தால் சம்சார துன்பம் அழியும். துறவு மேற்கொள்ள காரணம் வைராக்கியம் ஆகும். இதுவே காரணமல்லாது வேடம் காரணமாகாது.

159. மந்தமும்தீ விரமும்தீ விரதரமும் எனமூன்று வகைவி ராகம்

வெந்துயரம் வரும்பொழுது குடும்பத்தை வெறுத்துவரும் விராகம் மந்தம்

இந்தஉடல் அளவுமனை தனம்வேண்டாம் எனவிடல்தீ விரம்என் பார்கள்

அந்தணன்உவர் மித்தைஎன விடல்அதுதீ விரதரம்ஆம் அறிந்தி டாயே.

வைராக்கியம் மந்தம், தீவிரம், தீவிரதரம், என 3 வகையாகும். மனைவி, மக்கள், பொருள், இழப்பால், குடும்ப வாழ்வை வெறுப்பது – மந்த வைராக்கியம் உடல் உள்ளவரை சம்சார பந்தம் வேண்டாம் என வெறுத்து விடுதல் – தீவிர வைராக்கியம் பிரம்மலோகமும் பொய் எனக் கண்டு அதனையும் வெறுத்தல் – தீவிரதர வைராக்கியம் ஆகும் என தெளிவாயாக.

160. பாவிமந்த விராகத்தில் சந்தியா சங்கள்ஒன்றும்

பலித்தி டாதே

தீவிரத்தில் குடீசகமும் வெகூதகமும் என்றுஇரண்டு

திறங்கள் உண்டாம்

தாவிநடந் திடத்திடம் இலாதவர்க்குக் குடீசகமும்

சகங்கள் எங்கும்

மேவிநடந் திடத்திடம்உள் ளவர்க்குவெகூ தகமும்என

விதித்தார் மேலோர்.

மந்த வைராக்கியம் உள்ளோருக்கு எந்த சன்னியாசமும் கிட்டாது. தீவிர வைராக்கியம் கொள்வருக்கு குடீசகம், வெகூதம், என்ற இருவகை சன்னியாசம் கிட்டும் நடந்து செல்ல சக்தியற்றவருக்கு குடீசகமும், யாத்திரை செய்யக் கூடிய திடம் உள்ளவருக்கு வெகூதகமும் உரியன என சான்றோர் விதித்தனர்.

161. இருவகைதீவிரதரத்தும்அஞ்சன்என்றும்பராமஞ்சன் என்றும்சொல்வர்
வரும்அஞ்ச னுக்குமுத்தி சத்தியலோ கத்துஅன்றி வாராது என்பார்
பராமஞ்ச னுக்குமுத்தி இவ்வுலகில் ஞானத்தால் பலிக்கும் என்பார்
திரம்மருவும் பராமஞ்சன் தானும்இரு வகைஆகும் செப்பக் கேளாய்.

தீவிர தர வைராக்கியம் கொண்டோருக்கு ஹம்ஸன் பரம ஹம்ஸன் என்ற இருவகை சன்னியாசங்கள் சித்திக்கும். ஹம்ஸ சன்னியாசிக்கு மோட்சம் பிரம்ம லோகத்தில் சித்திக்கும் பூ உலகில் சித்திக்காது. பரம ஹம்ஸனுக்கோ தத்துவ ஞானத்தால் பூ உலகிலேயே மோட்சம் சித்திக்கும் பரம ஹம்ஸ சன்னியாசி இருவகைப்படுவர்.

162. சிஞ்ஞாசு ஞானவான் என்றுஇரண்டு பேர்கள்அவ
ரில் சிஞ் ஞாசு
மெய்ஞ்ஞான பூமியின்முன் மூன்றுபூமி யுள்நடக்கும்
விவேகி ஆனோன்
சுஞ்ஞான வான்என்போன் சீவன்முத்தி அடைந்துஇருக்கும்
தூய மேலோன்
அஞ்ஞானம் அகலும்அந்தச் சிஞ்ஞாசும் இருவகையாம்
அதுவும் கேளாய்.

பரம ஹம்ஸ சன்னியாசி சிஞ்ஞாசு, ஞானவான் என இருவகையினர் ஆவர். சிஞ்ஞாசு தன்னை அறிய விரும்பிய சன்யாசி சுபேட்சை, விசாரணை தனுமானசி இதில் ஒன்றினை அப்பியாசிக்கும் விவேகம் கொண்டவர். ஞானவான் என்னும் நல்ல சன்யாசி சத்துவாபத்தி அசம் சத்தி, பதார்த்த பாவனை துரியம் என்ற நான்கில் ஏதேனும் ஒன்றில் நிலை பெற்று உயிருடன் உலகில் உள்ளபோதே ஜீவன் முத்தி பெறுவர். சிஞ்ஞாசு சன்னியாசிகளில் இருவகை உண்டு.

163. பந்தமனை துறந்துசிலர் அதிதிகளாய் இருந்துஅடைவர் பரமஞானம்
அந்தணர்மன் னவர்வணிகர் சூத்திரராய் இருந்துசிலர் அடைவர் ஞானம்
இந்தவகை சாத்திரத்தும் உலகத்துநடப்பதுகண்டு இருந்தும் மைந்தா
சிந்தனையில் மயக்கம்என்னே சுருதியுத்தி அனுபவத்தால் தெளிந்தி டாயே.

முதல் வகை சன்னியாசி குடும்பம், செல்வம் ஆகியவற்றை துறந்து குருவை அடைந்து சிரவண மனன நிதித்தியாசனைத்தால் பிரம்ம ஞானம் பெறுபவர். இரண்டாம் வகை சன்யாசி பிராமனர், சத்திரியர், வைசிரியர், சூத்திரர் என்ற வருண தர்மத்தில் இருந்து நிஷ்காம்ய கர்மம் செய்து ஞானம் அடைவார்கள். சாத்திரம் வாயிலாகவும் உலக நடப்பையும் அறிந்த உனக்கு சன்னியாசி அல்லாதோருக்கு மோட்சம் உண்டா? என்ற சந்தேகம் எவ்வாறு ஏற்பட்டது ? சுருதி யுக்தி அனுபவத்தால் இந்தச் சந்தேகம் நீங்கி தெளிவு பெறுவாயாக.

164. பிறந்ததுஉண்டு ஆனால் அன்றோ பிறகுசா வதுதான் உண்டாம்
பிறந்ததே இல்லைஎன்னும் பிரமம்ஆ வதுவும் நானே
பிறந்தது நான்என்று ஆகில் பிரமம்அன்று அந்த நானே
பிறந்ததும் இறந்தது அற்ற பிரமம்ஆம் நானே நானே.

ஞானிகள் பிறப்பு, இறப்பு, அற்றவர்கள், பிறப்பு இல்லை என்பதால் அசம் என்று சுருதி கூறும் அந்தப் பிரம்மம் ஆகவே நான் இருக்கிறேன். பிறந்து "நான்" என்று கூறப்படும் அந்த "நான்" அகங்காரமே அல்லாமல் இலட்சிய அர்த்தமான பிரம்மம் ஆகாது. பிறப்பும் இறப்பும் அற்ற பிரம்மமாகிய நானே. "நான்" (நான் என்பதன் பொருளாக) ஆக இருக்கின்றேன்.

165. நான்என்ற பிரமம் ஆன நானேநான் அறியேன் என்றால்
நான் என்பது ஏது பின்னை நம்முடைப் புந்தி என்னில்
தான்அது மயக்கம் தன்னில் சாகுமே சாவாது ஆகி
நான்என நிறைந்து இருந்த ஞானம்ஆம் நானே நானே.

உதாசீன நிலையில் பிரம்ம வடிவாக 'நான்' இருக்கிறேன் என்று கூறும் ஆன்மாவே 'நான்' ஆகும். ஆன்மாவை அறியவில்லை என்றால் அப்போது நான் என்று கூறுவது எது

நம்முடைய புத்தி அவ்வாறு கூறினால். அந்த புத்தி சுழுத்தி நிலையில் அழியக்கூடியது. சுழுத்தியிலும் அழியாது நான், நான் எனப் பூரணமாய் இருக்கும் ஞான வடிவான ஆன்மாவே நான் என்ற பதத்தின் உண்மைப் பொருள் ஆகும்.

166. நிறைந்தவாறு எந்தவாறு நிலைதெரிந்து இலன்என் றாயேல்
அறிந்ததாம் சுழுத்திதன்னில் ஆனந்தம் அதுவே ஆகும்
குறைந்ததற்கு ஆனந்தம்தான் குவலயம் தன்னில் இல்லை
நிறைந்ததே இந்தஆன்மா நிதானம்இவ் அறிவு தானே.

"நான்" பூரணமாய் உள்ள தன்மை அறிய இயலவில்லை எனில் அஞ்ஞானத்தை அறிந்து இருப்பதாகிய ஆன்மா ஆனந்தமாகும். ஆனந்தத்தை பரிபூரணம் என்பது எங்ஙனம் எனில் குறைந்து இருக்கும் நிலையில் முழு ஆனந்தம் உலகில் எங்கேயும் இல்லை. ஆன்மா பரிபூரணமானது இந்த பரிபூரண பிரம்மமே உலகிற்கு முதற் காரணம்.

167. மனத்தினால் எண்ணித் தானே வந்ததுஇவ் உலகம் ஆகும்
நினைத்திடில் அநேக லோகம் நிற்பதுஅவ் அறிவில் அன்றோ
அனைத்தையும் கடந்துஅப் பாலும் அந்தமற்று அறிவுஇது ஆம்என்று
எனைத்தனி விசாரித் திட்டால் ஏகம்ஆய் நிறைந்தோன் நானே.

உலகம் மனோ பாவனையால் உண்டானது. உலகம் நிலைத்து இருப்பது பிரம்மத்தில் தான் கற்பிதமான மனம், பிரபஞ்சம், எல்லாம் பிரம்மமே ஆகும். அறிவாகிய என்னைச் சுத்தமாக விசாரித்தால் அனைத்தையும் கடந்து அப்பாலாய் முடிவு இல்லாமல் ஒன்றாக நிறைந்து இருப்பவன் நானே.

168. அந்தவாறு இருந்து கொண்டே ஆனந்தம் அனுப விக்க
எந்தவாறு இருந்து கொண்டால் எனக்குஇது தெரியும் என்னில்
இந்தமூன்று அவஸ்தை தம்முள் எழுந்திடும் விருத்தி நீக்கில்
அந்தவாறு இருந்து நீயும் ஆனந்தம் அடைய லாமே.

சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி அவத்தைகளால் ஏற்படும் சாந்தி, கோர, மூட விருத்திகள், நீங்கினால், நீயும் அகண்டமாய் இருந்து பரிபூரண ஆனந்தம் அனுபவிக்கலாம்.

169. வாதனா வசத்தி னாலே வருகிற விருத்தி எல்லாம்
ஏதினால் அடக்கல் ஆகும் என்றுதான் விசாரம் செய்யில்
போதம்ஆம் இராசன் தானாய்ப் புந்திஜம் புலன்கள் எல்லாம்
தாதராய் இருக்கப் பெற்றால் சகலமும் அடங்கும் தானே.

மனதின் விருத்திகளை எந்த உபாயத்தால் அடக்க இயலும் என்றால் ஒருவன் ஞானேந்திரியங்கள், கன் மேந்திரியங்கள், அந்தக் கரணங்களை தன்வசமாக்கி அடக்கி வைத்தால் சகல விருத்திகளும் தானே அடங்கும்.

170. விருத்திகள் அடக்க இன்னம் வினோதமாம் யோகத் தாலே
துருத்திபோல் ஊதும் மூச்சைச் சுகமுடன் அடக்கி நிற்கும்
கருத்து அதற்கு இல்லை என்னில் காரண சரீரம் ஆகிப்
பெருத்ததுஓர் அவித்தை தன்னைப் பிடுங்கிடில் அடங்கும் தானே.

யோக அப்பியாசத்தால் பிரணாயாமம் செய்தாலும் விருத்திகள் அடங்கும் தூல, சூட்சும சரீரங்களுக்கு காரணமான அவித்தையை அழித்தாலும் விருத்திகள் தாமே இடங்கும் தத்துவ ஞானத்தால் அவித்தை அழிந்தால் அவித்தையின் காரியமான அந்தக் கரணமும் விருத்திகளும் அடங்கும்.

171. காரண சரீரம் தன்னைக் களைவதுஎவ் வாறுஎன்று ஓதில்
ஆரணம் பொய்சொல் லாதே அதன்பொருள் அகத்தில் உய்த்துப்
பூரணம் ஆகும் என்மேல் புவனங்கள் தோற்றம் என்று
தாரணை வந்தது ஆகில் தரித்திடும் அவித்தை எங்கே.

வேதத்தில் கூறியவாறு ஈது அனைத்தும் பிரம்மம் என்பதை மனதால் உறுதியாகக் கொண்டு பரிபூரணமான என்னிடம் பிரபஞ்சங்கள் பொய்யாக தோன்றுகின்ற என்ற நிச்சயம் உனக்கு ஏற்பட்டால் அவித்தை எங்கேயும் இல்லாமல் அழிந்துவிடும்.

172. அப்படி இருக்கச் சித்தம் அலைதலால் விவகா ரத்தில்
எப்படிக் கூடும் என்னில் என்னைவிட்டு ஒன்றும் இல்லை
இப்படிக் கண்ட எல்லாம் என்மயம் என்க னாப்போல்
கற்பிதம் என்று தானே காண்கின்ற சித்து நானே.

மனது உலக விவகாரங்களால் சலனப்பட்டு இருக்கும். பரிபூரணமாக இருக்க வேண்டுமெனில் என்னைத்தவிர எதுவுமே இல்லை. பிரபஞ்சத்தில் நாம ரூபத்தை நீக்கிப் பார்த்தால் எல்லாம் என்மயம் ஆகும். காணப்படும் அனைத்தும் கனவு போல் கற்பிதமானது என்று அறிகின்ற சித்து வடிவமே நான் என்றும் நிச்சயிக்க வேண்டும்.

173. சித்துநான் நிறைந்தோன் என்ற திடம்மற வாது இருந்தால்
எத்தனை எண்ணி னாலும் ஏதுசெய் தாலும் என்ன
நித்திரை உணர்ந்த பின்பு நிற்கின்ற கனாவே போல
அத்தனை யும் பொய் தானே ஆனந்த வடிவு நானே.

சித்தாகிய நானே பரிபூரணமாக நிறைந்து உள்ளேன் என்று உறுதியாக இருந்தால் மனதால் எதை நினைத்தாலும் உடம்பால் எதை செய்தாலும் அதனால் தீங்கு எதுவும் இல்லை. தூக்கம் நீங்கி விழித்ததும் பொய் என உணரப்படும் கனவுபோல் மனம், வாக்கு, காய விவகாரங்கள் பொய் ஆகும். ஆனந்த வடிவமே 'நான்'' ஆம்.

174. நான்என உடலைத் தானே நம்பினேன் அநேக சன்மம்
ஈனராய்ப் பெரியோர் ஆகி இருந்தவை எலாம்இப் போது
கானலில் வெள்ளம் போலக் கண்டுசற் குருவி னாலே
நான்என என்னைத் தானே நம்பி ஈடேறி னேனே.

பல பிறவிகளில் உடலே நான் என்ற மயக்கத்தில் இருந்தேன். உயர்ந்தோர் தாழ்ந்தோர் எனக் கண்டது எல்லாம் கானல் நீர் போல் பொய் என குரு அருளால் உணர்ந்தேன். நானே பிரம்மம் என அறிந்து உய்வு பெற்றேன்.

175. என்னபுண் ணியமோ செய்தேன் ஏதுபாக் கியமோ காணேன்
நன்னிலம் தனில்எ ழுந்த நாரணன் கிருபை யாலே
தன்னியன் ஆனேன் நான்உத் தரீயத்தை வீசு கின்றேன்
தன்னியன் இன்னும் நானே தாண்டவம் ஆடு கின்றேன்.

நான் செய்த புண்ணிய பாக்கியத்தால் நன்னிலத்தில் அருளும் நாராயண குருவின் அருளால் நான் பேறு பெற்றவன் ஆனேன்.நான் ஆனந்தக் கூத்தாடிக் கொண்டு இருக்கிறேன்.

176. தத்துவ ஞானம் வந்த சந்தோட அதிச யத்தால்
நித்தம்ஆ டுவன்காண் என்ற நிலைமுன்ன மே அறிந்த
சத்தியம் அதனால் அன்றோ தாண்டவா என்றுஅ ழைத்தார்
அத்தனை மகிமை உள்ளோர் அன்னையும் பிதாவும் தாமே.

தத்துவ ஞானத்தால் ஏற்பட்ட ஆனந்தத்தில் நான் கூத்தாடுவேன் என்னும் நிலையை குருவின் திருவடியைச் சரணடைந்த போதே நிச்சயமாக உணர்ந்ததால் அப்போதே என்னை 'தாண்டவா' என்று பெயரிட்டு குரு அழைத்தார் அந்த குருவே எனக்கு தாயும், தந்தையுமாவார்.

177. வந்ததுஓர் இவ்ஆ னந்த மகிழ்ச்சியா ருடன்சொல் வேன்யான்
சிந்தையில் எழுந்து பொங்கிச் செகம்எலாம் நிறைந்து தேங்கி
அந்தம்இல் லாதது ஆயிற்று அப்படிக் குருவே தாந்த
மந்திரம் அருளும் ஈசன் மலரடி வணங்கி னேனே.

தத்துவ ஞானத்தால் ஏற்பட்ட இந்த மகிழ்ச்சி சாந்த விருத்தியில் உற்பத்தியாகி பிரபஞ்சம் முழுவதும் வியாபித்து பூரணமாய் உள்ளது. மந்திர உபதேசம் செய்யும் குருவாகிய ஈசனின் திருவடியை வணங்குகின்றேன்.

178. வித்தியா னந்தம் இந்த விதம்என விளம்பி னோமே
பத்தியால் இந்த நூலைப் பார்த்துஅனு பவித்த பேர்கள்
நித்திய தரும நிட்டை நிலைதனை அறிந்து சீவன்
முத்தியை அடைந்துஇ ருந்த முனிவரர் ஆகு வாரே.

கைவல்லியநவநீதம் எனும் இந்த நூலை விரும்பி பக்தியுடன் குருவாயிலாகவோ, ஜீவ பிரம்ம ஐக்கியத்தை கேட்டு அனுபவித்தவர்கள் புண்ணிய செயல்களால் நிட்டை கூடி தனது நிச வடிவத்தை அறிந்து நிலையான ஜீவன்முத்தி நிலையை அடைந்து முனிவர்களுக்கு நிகராக இருப்பார்கள்.

179. ஆரணப் பொருள் ஆம் வித்தி யானந்தம் விளங்க ஏதும்
காரணம் குறைவுஇ லாமல் கைவல்ய நவநீ தத்தைப்
பூரணம் ஆக்க வேண்டிப் பூர்வம்ஆம் நன்னி லத்தில்
நாரண குருந மக்கு நவின்றனர் யோகில் வந்தே.

“நன்னிலம்” எனும் தலத்தில் இருந்து அருளும் நாராயண குருவானவர் எனது தியானத்தில் தோன்றி சுருதியின் பொருள், சாதன, சதுஷ்டயம் முதல் வித்தியானந்தம் முடிவாக காரணங்களுக்கு குறையேதும் இல்லாமல் விளங்கச் செய்து கைவல்லிய நவநீதம் என்னும் இந்நூலை நிறைவு செய்ய அருளினார்.

180. குலவுசற் குருவின் பாதக் குளிர்புனல் தலைமேல் கொண்டால்
உலகினில் தீர்த்தம் எல்லாம் உற்றபேறு அடைவார் போல
நலமைஆ கும்கை வல்ய நவநீத நூலைக் கற்றோர்
பலகலை ஞான நூல்கள் படித்தஞா னிகளாய் வாழ்வார்.

கைவல்லிய நவநீதம் எனும் இந்நூலை கற்று அறிந்தவர்கள் பல கலைகள், ஞான நூல்கள் அனைத்தையும் கற்று உணர்ந்து சற்குருவின் திருப்பாதங்களை நீராட்டிய புனித நீரை தன் தலைமீது தெளித்துக் கொண்டால் புண்ணிய தீர்த்தம் யாவிலும் நீராடிய புண்ணியம் பெற்று ஞானிகளைப் போல் சிறப்புபெற்று புண்ணியவான்களாக வாழ்வார்கள்.

– சுபம் –

## 96.தத்துவங்கள் :

| | | |
|---|---|---|
| I | i) ஆன்ம தத்துவம் | 24 |
| | ii) வித்யா தத்துவம் | 7 |
| | iii) சிவ தத்துவம் | 5 |
| | (உட்கருவிகள் 36) | 36 |
| II | பஞ்ச பூதங்களின் கூறு | 25 |
| III | பிருதிவி வாயு வழி நாடி | 20 |
| IV | ஆகாயத்தின் வழி ஏடணை | 3 |
| V | வாக்காதி வழி தொழில் | 5 |
| VI | பிரகிருதியின் வழி குணம் | 3 |
| VII | விந்துவின் வழி வாக்கு | 4 |
| | (புறக்கருவிகள் 60) = | 60 |

ஆகத்தத்துவங்கள்

அகம் 36 + புறம் 60 - 96

### I.ஆன்ம தத்துவம்

| | | |
|---|---|---|
| பஞ்சபூதம் | 5 | நீர், நிலம், தீ, வளி, வான் |
| ஞானேந்திரியம் | 5 | செவி, மெய், கண், வாய், மூக்கு |
| தன் மாத்திரை | 5 | ஓசை, ஊறு, ஒளி, சுவை, வாசனை |
| கன்மேந்திரியம் | 5 | வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம் |
| அந்தக் கரணம் | 4 | மனம், புத்தி, சித்தம், அகங்காரம். |
| | 24 | |

அகங்காரம் ← சாத்விகம், ராஜசம், தாமசம்

சாத்விகம் - தைசத அகங்காரம்

ராஜசம் - வைகரி அகங்காரம்

தாமசம் - பூதாதி அகங்காரம்

| | | |
|---|---|---|
| II. வித்யாதத்துவம் | 7 | காலம், நியதி, வித்தை, கலை அராகம், புருடன், காரிய மாயை |
| III சிவ தத்துவம் | 5 | சுத்த வித்தை, ஈச்சுரம் சாதாக்கியம், சத்தி, சிலம் (விந்து) (நாதம்) |

மாயை

பிரகிருதி மாயை | அசுத்த மாயை | சுத்த மாயை

II. பஞ்ச பூதங்களின் கூறு

| | | |
|---|---|---|
| பிருதிவியின் கூறு (நிலம்) | 5 | மயிர், எலும்பு, தோல், நரம்பு, தசை |
| அப்புவின் கூறு (நீர்) | 5 | நீர், உதிரம், சுக்கிலம், மூளை, மச்சை |
| தேயுவின் கூறு (தீ) | 5 | ஆகாரம், நித்திரை, பயம், மைதுனம், சோம்பல். |
| வாயுவின் கூறு (காற்று) | 5 | ஓடுதல், நடத்தல், இருத்தல், கிடத்தல், நிற்றல். |
| ஆகாயத்தின் கூறு (வான்) | 5 | குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சர்யம். |
| III பிருதிவியின் வழி நாடி | 10 | இடகலை, பிங்கலை, சுழு மூனை, காந்தாரி, அத்தி, சிங்குவை, அலம்புடை, சங்கினி, புருடன், குகுதை. |
| வாயுவின் வழி நாடி | 10 | பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன், நாகன் கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயன். |
| IV. ஆகாயத்தின் வழி ஏடனை | 3 | அருத்தவேடனை, புத்திர வேடனை, உலக வேடனை |
| V. வாக்காதியின் வழி தொழில் | 5 | வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம். |
| VI.பிரகிருதியின் வழி குணம் | 3 | சாத்துவீகம், இராஜசதம், தாமசம். |
| VII விந்துவின் வழி வாக்கு | 4 | சூக்குமை, பைசாந்தி, மத்திமை, வைகாரி. |
| அகக் கருவிகள் | 36 | |
| புறக் கருவிகள் | 60 | |
| கருவிகள் | 96 | |

## சைவ சித்தாந்தம்

**பதி** — இறைவன்

**பசு** — ஆன்மா

**பாசம்** (மறைப்பு)

- ஆணவ மலம்
- கன்ம மலம்
  - சஞ்சித கன்மம்
  - பிராரத்த கன்மம்
  - ஆகாமிய கன்மம்
- மாயா மலம்
  - உலக இயக்கம்
    - சொல் பிரபஞ்சம்
      - எழுத்து
      - சொல்
      - சொற்றொடர்
    - பொருள் பிரபஞ்சம்
      - தத்துவம்
        - அகக்கருவி [36] · புறக்கருவி 60
      - கலை
        - நிவிர்த்தி கலை
        - பிரதிட்டா கலை
        - வித்தியா கலை
        - சாந்தி கலை
        - சாந்தியதீத கலை
      - புவனம்
- மாயேயம்
- திரோதன மலம்

# தத்துவ விளக்கப் படம் - 36 தத்துவங்கள்

தத்துவாதீத நிலை

↓

பரமசிவன் [ஞான சூரியன்]

↓

பராசக்தி

↓

ஆதிசக்தி [திரோதனா சக்தி]

↓

இச்சா சக்தி

↓

ஞான சக்தி

↓

கிரியா சக்தி

↓

மாயை [36 தத்துவங்கள்]

- சுத்தமாயை
  - நாதம் 36
  - விந்து 35
  - சாதாக்கியம் 34
  - ஈசுரம் 33
  - சுத்தவித்தை 32
- அசுத்தமாயை
  - காரியமாயை 31
  - காலம் 30
  - நியதி 29
  - கலை 28
  - வித்தை 27
  - அராகம் 26
  - புருடன் 25
- பிரகிருதிமாயை
  - சித்தம் 24
  - புத்தி 23
  - அகங்காரம் 22
    - சாத்துவிகம்
      - மனம் 21
      - ஞானேந்திரியம்: மெய் 15, வாய் 14, கண் 13, மூக்கு 12, செவி 11
    - இராஜசம்
      - கன்மேந்திரியங்கள்: கால் 20, கை 19, வாய் 18, எருவாய் 17, கருவாய் 16
    - தாமசம்
      - தன்மாத்திரை: ஓசை 10, ஊறு 9, ஒளி 8, சுவை 7, நாற்றம் 6
      - பஞ்சபூதம்: ஆகாயம் 5, வாயு 4, தீ 3, நீர் 2, மண் 1


உயிர்
ஆதித்தமண்டலம்
அக்னிமண்டலம்
சந்திரமண்டலம்
ஆதாரம்
மூலாதாரம்
சுவாதிட்டானம்
மணிபூரகம்
அனாகதம்
விசுத்தி
ஆக்ஞை
ஆன்மாவின் உடல்கள்
ஆனந்தமய கோசம்
விஞ்ஞானமய கோசம்
மனோமய கோசம்
பிராணமய கோசம்
அன்னமய கோசம்
ஆன்மாவின் அவத்தைகள்
காரண அவத்தை
காரிய அவத்தைகள்
கேவல நிலை
சகல நிலை
சுத்த நிலை
சாக்கிரம் (நனவுநிலை)
சொப்பனம், (கனவுநிலை)
சுழுத்தி (உறக்கநிலை)
துரியம்
துரியாதீதம்
கீழாலவத்தை
மத்தியாலவத்தை
மேலாலவத்தை

# காரிய அவத்தைகள்

## சாக்கிரம்

நனவுநிலை

தொழிற்படு கருவிகள் 35

ஆன்மா இலாடமென்ற புருவமத்தியில் நிற்கும்

| | |
|---|---|
| ஞானேந்திரியங்கள் | 5 |
| கன்மேந்திரியங்கள் | 5 |
| தன்மாத்திரை | 5 |
| வசனாதி விடயம் | 5 |
| பிராணாதிவாயு | 10 |
| அந்தக்கரணம் | 4 |
| புருடன் | 1 |
| ஆக | 35 |

## சொப்பனம்

கனவு நிலை

தொழிற்படு கருவிகள் 25

ஆன்மா கண்டத்தில் நிற்கும்

| | |
|---|---|
| தன்மாத்திரை | 5 |
| வசனாதிவிடயம் | 5 |
| வாயு | 10 |
| அந்தக்கரணம் | 4 |
| புருடன் | 1 |
| ஆக | 25 |

## சுழுத்தி

உறக்கநிலை

தொழிற்படு கருவிகள் 3

ஆன்மா இருதயத்தில் நிற்கும்

| | |
|---|---|
| பிராணன் | 1 |
| சித்தம் | 1 |
| புருடன் | 1 |
| ஆக | 3 |

## துரியம்

தொழிற்படு கருவிகள் 2

ஆன்மா தொப்புளில் நிற்கும்

| | |
|---|---|
| பிராணன் | 1 |
| புருடன் | 1 |
| ஆக | 2 |

## துரியாதீதம்

தொழிற்படு கருவிகள் 1

ஆன்மா மூலாதாரத்தில் நிற்கும்

| | |
|---|---|
| புருடன் | 1 |
| ஆக | 1 |


வழிபாடு முறைகள்
குருவழிபாடு
லிங்கவழிபாடு
சங்கமவழிபாடு
சரியை
கிரியை
யோகம்
ஞானம்
பாசஞானம்
பசுஞானம்
பதிஞானம்
தீட்சை
சமயதீட்சை
விசேட தீட்சை
நிர்வாண தீட்சை
ஆசாரிய தீட்சை
ஜபம்
சுத்தி
பூதசுத்தி
ஆன்ம சுத்தி
திரவிய சுத்தி
மந்திரசுத்தி
லிங்க சுத்தி
தசகாரியம்
வீடுபேறு
முக்தி
பதமுக்தி
அபரமுக்தி
பரமுக்தி
சீவன் முக்தி
சத்திநிபாதம்
இருவினை ஒப்பு
மலபரிபாகம்
ஞானம் பெறுதல் முக்திநிலை

## இந்த நூல் தொகுப்பிற்கான ஆதார நூல்கள் ;


1. ஸ்ரீலஸ்ரீ பொன்னம்பல ஞான தேசிக சுவாமிகளின் கைவல்லிய நவநீதம் மூலமும் தத்துவார்த்த தீபம் என்னும் உரையுடன் - எட்டாம் பதிப்பு - 2004

2. பிறையாறு அருணாசல சுவாமிகளின் கைவல்லிய நவநீதம் உரை - 1966 ஆம் ஆண்டு பதிப்பு

3. கோவிலூர் மரபு வேதாந்த நூல்கள் - கோவிலூர் ஆதீனம் 2007 ஆம் ஆண்டு பதிப்பு.

4. கைவல்ய நவநீதம் மூலமும் உரையும், தவத்திரு.சு.பழனியப்ப சுவாமிகள், போடிபாளையம் இரண்டாம் பதிப்பு - 2014




ஸ்ரீ நாராயண தாண்டவேஸ்வர சுவாமிகள் ஜீவ சமாதி விமான தோற்றம்.

சற்குருவே துணை

நூல் அறிமுகம் :

**திரு.இரா.கல்யாணராமன் – திரு.வ.சுப்ரமணியன்,**

தலைமை : **திரு.N.வெங்கட்ராம சாஸ்திரிகள்** அவர்கள்

முன்னிலை ; திரு.**K.மதியழகன்,** அவர்கள் – வரவேற்புரை : திரு.**V.முருகேசன்,** அவர்கள்

**நூல் வெளியீட்டு ஆசியுரை வழங்குபவர் :**

சீர்வளர்சீர் . **மெய்யப்பன் ஞானதேசிக சுவாமிகள்,**

**கோவிலூர் மடாலயம்.**

நூல் பெற்றுக்கொள்பவர்கள் : திரு.Dr.V.**பத்மநாபன்** – திரு.M.அருணாச்சலம்

திரு.C.சௌந்தரராஜன் – திரு.M.குலசேகரன்– திரு.V.ரமேஷ், திரு.நாகேந்திரன்

திரு.நம்மையன்

**விளக்கம் அளிக்கும் வேதாந்த சீடர்கள் ;**

திரு.இரா.அரங்கராஜன், – திரு.கொ.பூமிநாதன், – திரு.காத்தபெருமாள்,

திரு.A.V.கல்யாணவெங்கட்ராமன்

ஏற்புரை : ச.வெங்கடேசன், எம்.எஸ்.ஸி., அவர்கள்.

நன்றியுரை : திரு.சு.சொக்கலிங்கம், அவர்கள்.

தொடர்பு : V.சுப்ரமணியன், செந்தில் டீ & காபி பார், கடைவீதி, நன்னிலம்.

இங்ஙனம்

**திரு.கே.ராஜகுமாரன்,** ஆய்வாளர்,
இ.ச.அ.ஆட்சி துறை, நன்னிலம்.

ஸ்ரீ மதுவனேஸ்வரர் சுவாமி வார வழிபாட்டுக் கழகம்
மற்றும் மகான் ஸ்ரீமகாகோவிந்த சாமிகளின் சீடர்கள்,







**ஸ்ரீ.கே.பத்மநாப சுவாமிகள், திருமருகல்.**